உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அபயாம்பிகை சதகம்





மாயூரம்

நாதசுவாமி தேவஸ்தானம்

உ

சிவமயம்

# அபயாம்பிகை தோத்திரம்

பரந்தமலர்க் கருங்குழலும் செவ்வாயும்
வெண்ணகையும் பசுவேய்த் தோளும்
சுரந்தஅருள் பொழியும்இரு விழியும்எழில்
வழிமுகமும் துணைப்பொற் றேடும்
கரந்ததிரு இடையும்ஒண் செம் பட்டுடையும்
மங்கலப்பொற் கழுத்தும் நாளும்
இரந்தவருக்கு அருள் அஞ்சல் நாயகிநூ
புரப்பதமும் இறைஞ்சி வாழ்வாம்.

—ஸ்ரீ மீனுட்சிசுந்தரம்பிள்ளை.

உ

சிவமயம்

# வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

*அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும்*
*கண்டு வீற்றிருக்கும் கருத்து ஒன்றிலோம்*
*வண்டுசேர் மயிலாடு துறை அரன்*
*தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே.*

திருச்சிற்றம்பலம்

—அப்பர்.

சிவம் ஆன்மாக்களுடைய பரிபாக நிலைகளுக்கு ஏற்ப உருவம் அருவம் அருவுருவம் என்ற பல வகைத் திருமேனிகளைத் தாங்கி அருளாரமுதத்தை அளிப்பதுபோலச் செந்தமிழ், சிறுவர்முதல் ஞானிகள் வரையிலுள்ள மக்களது அறிவின் பண்பாட்டிற்குத்தக, சிறு நூல்களாகவும் வரலாறுகளாகவும் தத்துவ அடிப்படைகளையுடைய தோத்திரங்களாகவும் காட்சிவழங்கி அறிவைப் பண்படுத்துகின்றது. பரசிவத்தின் திருவருள் ஆன்மாக்களை ஈடேற்றுகின்ற கருணை ஒன்றையே லக்ஷியமாகக் கொண்டு இருப்பது போலவே, செந்தமிழ் எந்த வழியிலும் மக்களோடு ஒன்றியிருந்து உள்ளத்தை உயர்த்துகின்றது, இவ்வகையான பணியில் மக்களுக்கு மிகப்பெரிதும் பயன்படுவன பிரபந்தங்களாகிய

சிறு நூல்களே. சிறுநூல்கள் தொண்ணூற்றுறு வகைப்படும், அவற்றுள் சதகம் என்பதும் ஒன்று.

சதகம் நூறு பாடல்களைக் கொண்ட நூல். ஒவ்வொரு பாட்டின் இறுதிப்பகுதி ஒரே தொடரா யிருத்தல் வேண்டும். இதனை மகுடம் என்று அழைப்பது மரபு.

தமிழில் தொண்டைமண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், சோழமண்டல சதகம், கொங்கு மண்டல சதகம், ஈழமண்டல சதகம், கார்மண்டல சதகம், குமரேச சதகம், அறப்பளீச்சுர சதகம் முதலிய பல சதகங்கள் உள்ளன. இந்நூல்களின் குறிக்கோளனைத்தும், எளிய இனிய செந்தமிழ்நடை வாயிலாகத் தெய்வ உணர்ச்சியும் ஒழுக்கநெறியும் உண்டாக்குவதே. அங்ஙனமே இந்த அபயாம்பிகை சதகமும் எளிய இனியநடையில் அபயாம்பிகையின் அற்புதங்களை நினைவூட்டி, நெஞ்சத்தைக் கனிய வைத்து, நேர்மையும் ஒழுக்கமும் வளரத் துணை செய்கின்றது.

இந்நூல் 'மயிலாபுரியில் வளரீசன் வாழ்வே அபயாம்பிகைத்தாயே' என்ற மகுடம் உடையதாக, நூறு பன்னிருசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங் களால் அமைந்திருக்கிறது, எளியநடை ஒன்றே கருதி எளியவர் வழங்குகிற வழக்கியல் மரூஉச் சொற்களும் பழமொழிகளும் இதில் அங்கங்கே இடம்பெற்றுள்ளன.

தென்னுட்டில் சத்தியுபாசனையானது பஞ்ச மகாரங்கள் அற்ற தூய்மையான நெறியில் போற்றப்பட்டுவருகிறது. சிவசத்திகளை ஒன்ருயும் வேருயும் உடனுயும் பாவிக்கின்ற சிறப்பியல்பு செந்தமிழ் நாட்டிற்கே உரியது. அதனை அம்மை நூல்களாகிய அபிராமியந்தாதி, சவுந்தரியலகரி, அபயாம்பிகை சதகம்போன்ற நூல்கள் அமைத்துக்காட்டுகின்றன. ஆதலால் இங்கே வாமமார்க்கம் மேற்கொள்ளப்படவேயில்லை. ஆகவே இந்நூல் சிவத்தோடு பிரியாத சத்தியைப் புகழ்கின்ற ஒரு தோத்திர நூலாகும்.

இந்நூல் பெரும்பாலும் மக்களாகிய நமக்குப் பராசத்தியாகிய தாயின் உபகாரங்களைப் பாராட்டிப் பேசி. நம் மனத்தைக் கரைத்து, பக்தியைச் சுரக்கச் செய்து, பராசத்தியினுடைய திருவருளைப்பெற்று உய்யச்செய்கிறது.

1888-ம் ஆண்டிலும், 1911-ம் ஆண்டிலும், 1951-ம் ஆண்டிலும், 1956-ம் ஆண்டிலுமாக இது பலபதிப்புக்களாக வெளிவந்துள்ளது. இவைகளும் பழைய ஏட்டுப்பிரதி ஒன்றும் இப்பதிப்பிற்கு மிகத் துணைசெய்தன. ஏடுகளில் காணப்பட்ட திருத்தங்களின் சிறப்பியல்புகளையும் நயமான கருத்துக்களையும் திருவுளம்பற்றிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தமது அருளாட்சியின்கீழ் அமைந்துள்ள மாயூரம் ஸ்ரீ மாயூரநாதசுவாமி தேவஸ்தானச்சார்பில் இந்த நூலை வெளியிட ஆணையிட்டருளினுர்கள். அவ்வண்ணம் இது சிறந்த பல திருத்தங்களுடனும்

தெளிவான குறிப்புரையுடனும் வெளிவருகின்றது, இப்பதிப்பிலுள்ள அருமையான பாடங்கள், பழைய பதிப்புக்களைவைத்து ஒப்புநோக்குவார்க்குச் சுவை தருவனவாம். ஆதலின் அவை தனியே எடுத்துக் காட்டப்பெறவில்லை.

ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் நல்லருள் ஆசியால் இந்நூல், முதற்பதிப்பாக மாயூரம் ஸ்ரீ மாயூரநாத சுவாமி தேவஸ்தானத்தில் நடைபெற்ற திருப்பதிகக் கல்வெட்டுத் திறப்புவிழா (10—2—59) அன்று வெளிவந்தது. இப்போது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

இதனைச் சைவநல்லுலகம் ஏற்றுப் பாராயணம் செய்து ஸ்ரீ அபயாம்பிகை திருவருளால் இருமைப் பயனும் எய்துமாக.

இங்ஙனம்,

திருவாவடுதுறை,
30—5—67.

ஆதீன மகாவித்துவான்
**ச. தண்டபாணி தேசிகர்.**

# நூலாசிரியர் வரலாறு

திருமயிலாடுதுறை என்னும் மாயூரத்திற்குக் கீழ்பாலுள்ள நல்லத்துக்குடி என்ற கிராமத்தில், சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு அந்தணர்குலத்தில் கிருஷ்ணசாமிஎன்றபெயருடன்தோன்றினர். இளமையிலேயே தாய்தந்தையர்களை இழந்தார். அன்னையை இழந்தபோதுதான் இவருக்குத் துக்கம் மேலிட்டது. அதனல் மயங்கி அன்னை இழந்ததையும் அறியாராய்த் தன் அன்னையை அழைத்தனர். ஸ்ரீ அபயாம்பிகை இவர் முன்னே ஓர் அந்தணமாதாகத் தோன்றி ‘மைந்தா! அழாதே; இதை உண்’ என்று சிற்றுண்டி அளித்துச் சிறிதுநேரம் இருந்து மறைந்தனர். மீட்டும் ஒருநாள் அங்ஙனமே இவர் அழ, அம்பிகை தோன்றி அமுதம் ஊட்டி அழுகையை நிறுத்தித் திருக்கோயிலில் தனது சந்நிதிக்கு அழைத்துவந்து அங்கே மறைந்தனர். அது முதல் கிருஷ்ணசாமி ஐயர் அம்பிகையைத் தரிசித்து வருவாராயினர்.

ஒருநாள் இரவு அர்த்தயாம தரிசனம் செய்து வீட்டிற்குத் திரும்புகின்றபோது கோபுரவாயிலுக்கு வெளியில் காலில் இடறிக்கொண்டார். காலில் காயம் பட்டது. ஆற்றுது, அன்னே! அன்னே! என அலறினர். அபயாம்பிகை கைவிளக்குடன் வந்து ஒளி காட்டி ஊறுபோக்கி உய்வித்தனர். அன்றுமுதல் இவர் அர்த்தயாம தரிசனம் செய்து வீடுபோகுமளவும் கைவிளக்கு ஆளின்றி அகம்வரையில் சென்று வழிவிடும். இவ்வருளால் மனம்கரைந்தஐயர் இவ்வளவு பெருங்கருணைக்கு யாதுசெய்வேன் என்று அகம் குழைந்தனர். அன்னை

'செந்தமிழ்ப்பாவால் என்னுடைய சிந்தையைக் குளிரச் செய்க; அதுவேபோதும்' என்று அசரீரியாக அறிவிக்க ஐயர் 'அடியேன் கவிதை இயற்றும் அளவுக்குக் கல்வி கற்றிலேனே; எங்ஙனம் பாடுவேன்; ஆணையிட்ட அம்மையே அதற்கு ஏற்ற அறிவும் அருளவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார். அங்ஙனமே அம்மை ஐயர் அகத்துள்நின்று உணர்த்த இச்சதகம் எழுந்தது.

ஐயரவர்கள் அம்மையின் கருணையில் ஆர்வம் பெருகியவராக அநுதினமும் வீட்டிலும் ஆராதித்து வந்தார். அடிக்கடி மெய்மறந்த தியானத்தில் திளைத்திருப்பார். இவரிடம் பொறாமைகொண்ட சில அந்தணர்கள் அரசாங்க அதிகாரியினிடம் 'இவர் ஒழுக்கம் கெட்ட அந்தணர்; மது மாமிசங்களை உண்கின்ற சாக்தேயர்' என்று அறிவித்து இவருக்குப் பல்லாற்றானும் இன்னல் விளைவித்தனர். ஐயரவர்கள் மனம் வருந்தி, 'ஏழை தனையே பகைப்பவர்கள் இருமா நிலத்தில் சலுகை உண்டாய் நான்தான் பெரியன் என்றுரைத்த நாவும் வாயும் அடைத்து எமனார் நகரில் பயணமாகிவர நடத்தாய்' என்று அம்பிகையிடம் வேண்டிக்கொண்டார். அதனால் இன்னல்களகன்றன. இவ்வண்ணம் இவ்வன்பருக்காக அபயாம்பிகை நிகழ்த்திய அற்புதச் செயல்கள் பலவாம். இப்படி அருள்வாழ்வு வாழ்ந்த ஐயரவர்கள் ஒருநாள் அபயாம்பிகையை அர்த்தயாமத்தில் வழிபட்டுக் குருக்களிடம் விபூதிப்பிரசாதம்பெற்று நெற்றியில் அணிந்துகொள்ளும்போது இவர் உருவம் ஒருவரும் காணமுடியாத நிலையில் அற்புதமாக மறைந்தது. இவர் ஆன்மா அம்மையின்திருவருளில் தோய்ந்து சிவானந்தப்பெருவாழ்வில் வாழ்கிறது.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருமயிலாடுதுறை

# அபயாம்பிகைசதகம்

---

## காப்பு

அபயாம் பிகைசதகம் அன்பாய் உரைக்க
உபய சரணம் உதவும் — சபைநடுவுள்
ஆடுகின்ற ஐயன்முதல் அன்பாகப் பெற்றஒரு
கோடுமுகத் தானை குறித்து.

---

கனகசபையில் ஆனந்தக் கூத்தாடும் ஸ்ரீ ஞானமா நடராசப்பெருமான் முதன்முதலாக அன்புடனே பெற்ற ஒற்றைக்கொம்புடைய யானைமுகக்கடவுள், அடியேன் அபயாம்பிகைச் சதகத்தை அன்புடனே உரைக்க இரண்டு திருவடிகளையும் துணையாகத்தந்து அருள்செய்யும் என்பதாம்.

அபயாம்பிகை - அஞ்சல்நாயகி; இது மயிலாடு துறையில் எழுந்தருளியிருக்கும் அம்மையாரின் திரு நாமம். சதகம்-நூறு பாடல்கொண்ட நூல். உபயம் - இரட்டை.

# நூல்

1 பாதாம் புயத்திற் சிறுசதங்கைப்
பணியுஞ் சிலம்புங் கிண்கிணியும்
படர்பா டகமுந் தண்டையுடன்
படியுங் கொலுசுந் தழைத்தருளும்
பீதாம் பரமுந் துவள்இடையும்
பிரியா தரைஞாண் மாலைகளும்
பெருகுந் தரள நவமணியும்
புனையுங் குயமும் இருபுயமும்
போதா ரமுத வசனமொழி
புகலும் வாயும் கயல்விழியும்
புண்ட ரீகத் திருநுதலும்
பொன்போற் சடையும் மதிமுகமும்
வாதா டியபே ரின்பரச
வதனக் கொடியே உனைஅடுத்தேன்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*1. சதங்கைப்பணி-சதங்கை எனப்படும் ஆபரணம். படியும் - காலில் படிந்துகிடக்கும். தரளம் - முத்து. குயம் - பரஞானம் அபரஞானமாகிய இரண்டு தனங்கள். அமுத வசன மொழி - அமுதம்போலும் வார்த்தைகள். வசனமொழி: இது ஒரு பொருட்பன்மொழி. போது ஆர் வாய், அமுத வசனமொழி புகலும் வாய் எனக் கூட்டுக. புண்டரீகம்-தாமரை. மதி - சந்திரன். வாது ஆடிய - காற்றுல் அசைந்த. வாதம் என்பது வாது எனக் கடைக்குறையாக நின்றது. இறைவி மதிமுகம் முதலியவற்றைத் தாங்கி, காற்றுல் அசைகின்ற அழகிய கொடிபோல நிற்கின்றுள் என்றவாறு. மயிலாபுரி - மயிலாடுதுறை; இப்போது மாயூரம் என வழங்கப்படுகிறது.*

2 அஞ்சு முகத்தி நவமுகத்தி
ஆறு முகத்தி சதுர்முகத்தி
அலையில் துயிலும் மால்முகத்தி
அருண முகத்தி அம்பரத்தி
பஞ்சா க்ஷரத்தி பரிபுரத்தி
பாசாங் குசத்தி நடுவனத்தி
பதுமா சனத்தி சிவபுரத்தி
பாரத் தனத்தி திரிகுணத்தி
கஞ்ச முகத்தி கற்பகத்தி
கருணை கரத்தி தவகுணத்தி
கயிலா சனத்தி நவகுணத்தி
காந்தள் மலர்போல் சதுர்கரத்தி
மஞ்சு நிறத்தி பரம்பரத்தி
மதுரச் சிவத்தி மங்களத்தி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

2. அஞ்சு முகத்தி - ஈசானம் முதலிய ஐந்து முகங்களோடு கூடிய இறைவனுக்குச் சத்தியாக இருத்தலின் இவளும் அஞ்சு முகம் உடையளாயினள்; 'எத்திறம் நின்றானீசன் அத்திறம் அவளும் நிற்பள்' ஆதலின். நவமுகத்தி - வாமை, ஜேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி ஆகிய ஒன்பது சத்திகளாயிருக்கும்போது ஒன்பது முகத்தை உடையவள்: ஆறு முகத்தி - கௌமாரி நிலையில் ஆறு திருமுகங்களை உடையவள். சதுர்முகத்தி - பிராமி நிலையில் நான்கு முகங்களை உடையவள். மால் முகத்தி - வைஷ்ணவ நிலையில் திருமாலுக்கு ஒத்த திருமுகமுடையவள். அருணமுகத்தி-மாகேசுர நிலையில் செந்நிறமான முகம்

3 உச்சிக் கிளியே அருட்கிளியே
உணர்வுக் குணர்வாய் உயிர்க்குயிராய்
உதித்த கிளியே பரவெளியில்
ஒளிவான் பழத்தை உன்னிவரும்
நற்சொற் கிளியே கதம்பவன
நகரில் வாழும் பரைக்கிளியே
ஞானக் கிளியே மறைவனத்தில்
நடனக் கிளியே சிவக்கிளியே
பச்சைக் கிளியே அன்பர்மதி
படரும் ஆவி ஓடையினில்
பரவுங் கிளியே நிதிக்கிளியே
பவழக் கிளியே பதிக்கிளியே
வச்ரக் கிளியே நவபீட
வாசற் கிளியே அருள்அமையும்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

உடையவள். அம்பரத்தி - ஆகாயமே வடிவானவள். பரிபுரத்தி - சிலம்பினை உடையவள். நடுவனத்தி - பூமிக்கு நடுவணதாகிய விந்திய அடவியிலே வசிப்பவள். பதுமாசனத்தி - தாமரையாகிய ஆசனத்தில் எழுந்தருளியிருப்பவள். தாமரை என்றது ஈண்டு சகஸ்ராரத்தை. பாரம் - பெருமை. கஞ்சம்-தாமரை. மஞ்சு - மேகம்.

3. உச்சிக்கிளி - ஸ்ரீவித்தியாசக்கரத்தின் உச்சியில் விளங்குகின்ற கிளிபோன்றவள். பரவெளியில் ஒளி வான் பழத்தை உன்னி வரும் நல்சொல் கிளி - பராகாயத்தில் விளங்குகின்ற ஒளிவடிவான பெரிய நமச்சிவாயக் கனியை எண்ணி வருகின்ற நல்ல சொல்லை

4 பண்டு மறையின் முடிவினுள்ளே
பழுத்த பழமே அருட்பழமே
பரிபா கத்துப் பத்தர்நெஞ்சில்
படர்ந்த பழமே நவமுடிமேல்
என்றுங் கனிந்த திருப்பழமே
இமையோர் தேடித் தேடியுமே
எட்டாப் பழமே காசினியில்
எவர்தாம் தனையே உணர்ந்தோர்கள்
கண்டு புசிக்கும் பதிப்பழமே
கருணைப் பழமே சிவப்பழமே
கயிலா யத்தில் அரன்முடிமேல்
கனிந்த பழமே கதிப்பழமே
மன்றுள் மணக்கும் அடியவர்க்கும்
மாயோ கியர்க்கும் உதவிநிற்கும்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

உடைய கிளி போன்றவள். மறைவனம் - வேதாரணியம். அன்பர் மதி படரும் ஆவி ஓடை - அடியார்களுடைய அறிவின் வடிவாகப் படர்ந்தோடுகின்ற உயிராகிய ஓடை. ஓடை - சிறிதுதூரம் ஓடிநிற்கும் நீர்நிலை. நவபீடவாசல் - நவகோணங்களாகிய பீடத்தினை உடைய வாயில்.

4. மறையின் முடிவு - உபநிடதம். நவமுடி - நவகோணங்களின் உச்சி. காசினி - பூமி. மன்றுள் மணக்கும் அடியவர் - புருவநடுவாகிய சபையிலே உன்னை வைத்துத் தியானிக்கிற அடியவர்கள்.

5 தேனே பாலே சருக்கரையே
தெவிட்டா அமுதே கற்கண்டே
சீனி யுடன்முப் பழச்சாற்றில்
சிறந்த ரசமே செம்பொன்மலை
மானே மடலே மடக்கொடியே
வளர்ந்த வனமே திருவதன
மயிலே குயிலே அன்பரெலாம்
வாரிச் சொரியும் மணிநிதியே
ஊனே என்றன் உயிர்க்குயிரே
உள்ளும் புறம்பும் உறுமொழியே
ஒளிசேர் கனகக் கற்பகமே
உதித்த சுடரே திருப்பரமே
வானே வானின் வளிக்கனலே
வனமே பூவே வரைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

5. செம்பொன்மலை - மகாமேருமலை. மடல் - இதழ். மணி நிதி – மணிமுதலாகிய செல்வங்கள். ஊன் - உடம்பு. கனகக் கற்பகம் - பொன்மயமான கற்பகம். வான் - ஆகாயம். வளி - காற்று. கனல் - நெருப்பு. வனம் - தண்ணீர். பூ - பூமி. வரைமகளே - இமயமலையரசன் புதல்வியே.

6 பஞ்சா பரணி நவபூர்ணி
பரஞ பரணி தவசரணி
பரமேஸ் வரியே ஈஸ்வரியே
பஞ்சா க்ஷரத்தி பங்கயத்தி
எண்சாண் உடம்பில் தொண்ணூற்ற
றிசைந்த தத்வா திகமுகமே
இறையோ னிடத்தில் நடனமிடும்
இமையோர்க் கரசே ஏகவெளிக்
கஞ்சா சனத்தின் நிலையாளே
கருஞ லயத்துள் உறைபவளே
கன்னற் சிலையும் ஐங்கணையும்
கரத்தில் சிறந்த பரைத்திருவே
அஞ்சா ணவங்கள் அகன்றடியார்
மனத்துள் உறையும் அருட்கடலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

6. பரணம் - தரித்தல். தொண்ணூற்ருறு இசைந்த தத்வாதிக முகமே - தொண்ணூற்ருருகச் சொல்லப் பெற்ற தத்துவங்களைக் கடந்த இடமாக விளங்கு பவளே. முகம் - இடம். கஞ்சாசனம் - தாமரையாகிய ஆசனம். கன்னற்சிலை - கருப்புவில். ஐங்கணை - முல்லை முதலாய ஐந்து மலர்ப்பாணங்கள். அஞ்சாணவங்கள்- ஆணவம் முதலிய ஐந்து மலங்கள்.

7 எங்கும் நிறைந்த அருள்மணியே
ஏக மணியே ஒளிர்மணியே
இறையோ னிடத்தில் நடனமிடும்
இமைய மணியே நவமணியே
கங்குல் பகலும் கண்டவெளிக்
கலைநான் குடைய திருமணியே
கண்ணின் மணியே பொன்மணியே
கமலா சனத்தில் வளர்மணியே
தங்கும் அடியார் இதயமதில்
தழைத்த மணியே தவமணியே
தரணிக் கொளியாய் இரவுபகல்
தானே வளர்ந்த தளிர்மணியே
மங்குங் கருத்தை நிலைநிறுத்தி
வதன வெளியில் படர்மணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

7. கங்குல் பகலும் கண்ட வெளிக்கலை - இரவையும் பகலையும் கடந்து அப்பாற்பட்ட பராகாயத்திலே தோன்றிய கலை. கலை - ஞானம்; அவை நான்காவன:- சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ்ஞானம். தரணிக்கு-பூமிக்கு. தளிர்மணி-தளிர்க்கின்ற மணி; வினைத்தொகை. மங்குங் கருத்து - தேய்கின்ற அறிவு. வதன வெளி - முகமாகிற ஆகாயம்.

8 அழியச் சனன அலைமுழுதும்
அலையும் மனத்தை நிலைநிறுத்தி
ஆருதார அடிநடுவுள் அருணு
சலத்தின் வேரினுள்ளே
சுழியைத் திறந்து வாயுவதாற்
சூழ்ரே சகபூ ரகத்தாலுங்
தோன்றுங் கும்ப காதியுடன்
சோதி படரும் ஞானவெளி
விழியுந் திறக்கும் மதிக்குழம்பு
மிகுந்து சுரக்கும் நவக்கிரக
வெளியா மேலே வெளிபடர்ந்து
விம்மித் தனையாய்ந் திருக்கஅருள்
வழியைப் பொருத நாயடியேன்
மனத்தா மரையுள் நீவருவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*8. சனன அலை - பிறவிக்கடல். அலையும் மனம் - ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றித் திரியும் மனம். ஆருதார அடி நடுவுள் - மூலாதாரம் முதலான ஆதாரங்களின் அடியிலும் நடுவிலும். அருணசலம் என்றது செஞ்சோதியாகக் காட்சியளிக்கும் புருவமத்தியில் உள்ள சுழுமுனநாடியின் உச்சியை. அதன் வேராவது இடைபிங்கலை நாடிகளின் நடுவாக மூலாதாரம் வரையிற் சென்றுள்ள சுழுமுனநாடியின் அடி. சுழி - சுழுமுனை. ரேசகம் - வாயுவை வெளிவிடுதல். பூரகம்- அதனை நிறைத்தல். கும்பகம் - அதனை நிலைக்கச்*

9 கண்ணா ரமுதே உனையனது
கண்தான் களிக்க மொழிகுழறக்
கதிக்க உயிரும் உடல்புளகங்
காணும் பருவம் பெறுவேனோ
விண்ணா ரமுதே சிவபுரத்தில்
விளைந்த கனியே தேன்கடலே
வீசிப் படர்ந்த கமலத்தில்
வீற்றே யிருக்கும் விழிச்சுடரே
பெண்ணா னதுவே ஆண்வடிவே
பேணும் அலியே பிறங்கொலியே
பேதை நாயேன் இதயமதிற்
பிரியா திருக்குந் தவக்கொழுந்தே
மண்ணா டியவன் இடப்பாகம்
வளருங் கொடியே மடமயிலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

செய்தல். மதிக்குழம்பு - சந்திரமண்டலத்திலிருந்து ஊறும் அமுதம். நவக்கிரக வெளி - ஒன்பது துவாரங்களை உடையதாய் ஒன்பது கிரகங்களின் உபாதிக்கு உட்பட்ட உடலைக்கடந்துள்ள துவாதசாந்தப் பெருவெளி.

9. கதிக்க - மகிழ்ச்சியால் உயர்வடைய. புளகம் காணல் - மயிர்க்கூச்செறிதல். வீசி - நாலாபக்கமும் பரவி. கமலம் - தாமரை. கமலமதில் வீற்றேயிருக்கும் விழிச்சுடரே என்றது முகமாகிய தாமரையில் வீற்றிருக்கும் விழிகளை உடைய சுடர்போன்றவளே

10 தீரா மயக்கப் பிணிநோயைத்
தீர்க்கும் மருந்தே அருமருந்தே
தேவா திகளும் அறியாத
கிருஷ்ணன் ஆதி சகோதரியே
ஆரா திப்பார் பூசிப்பார்
அமைந்துன் நாம மதைநினைப்பார்
அடுத்தோர் இன்ப சுகமனைத்தும்
அடையும் எனவே மறைவிளம்ப
நேரே யிருந்து களிப்பவளே
நித்யா னந்த சுகப்பொருளே
நெறியே குறியே எனைஆளும்
நிமலி அமலை சுகத்தாளே
வாரா கினியே துட்டரிடர்
மனத்தை அழிக்குஞ் சினத்தாளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

என்பதாம். பெண்ணனதுவே - பெண்வடிவமான பொருளே. மண்ணுடியவன் - இம்மண்ணுலகத்தில் ஆடியருளும் ஆனந்தக்கூத்தன்.

*10. தீரா - வேறொன்றாலும்நீங்காத. மயக்கப்பிணி - ஆணவமலத்தால் விளைந்த அறியாமையாகிய நோய். கிருஷ்ணனுக்கு ஆதி சகோதரியே என்க. மறை - வேதம். நிமலி என்பது நிர்மலி என்பதன் திரிபு; இயற்கையாகவே மலத்தினின்றும் நீங்கியவள் என்ப தாம். வாராகினி - வாராகி. இடர் மனம் - துன்பஞ் செய்யும் மனம்.*

11 மெய்யிற் படர்ந்த அருட்கடலே
விளையும் ஞான முளரியினில்
விரிவாய்ப் பொருந்தும் பரநிதியே
வினையை அகற்றும் பதமுடையாய்
உய்யுந் தவத்தோர் மேலோர்கள்
உறுதி யுடனே மகிழ்பதியே
ஒன்றும் யோக முடிவதனில்
ஒளியாய் வெளியாய் உதித்தவளே
செய்ய கமலத் தயன்மனைவி
தினமும் பணியுந் திருவருளே
தேகா தேகக் கோடியெலாஞ்
சிறந்து நிறைந்த சின்மயமே
வையத் தடங்கா அருள்மலையே
வருண அருண ஒளிமணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

11. முளரி - தாமரை. ஒன்றும்யோகம் - தனிச்சிறப்புடைய யோகம். இறைவியோடு பொருந்துதலாகிய யோகம் என்றுமாம். ஒளி - புருவமத்தியில் காணப்பெறும் செவ்வொளி. வெளி - அதற்குமேல் ஆஞ்ஞையிலும் அதற்குமேல் துவாதசாந்தப் பெருவெளியிலும் காணப்பெறும் பரவெளி. அயன் - பிரமன்.

தேக அதேகக் கோடி - உடலோடு கூடியனவும், கூடாதனவுமாகிய உயிர்வருக்கங்கள். உடலொடு கூடாதன கேவலாவத்தையில் மலம் ஒன்றேடுமட்டும் கிடப்பன. சின்மயம் - ஞானசொரூபம். வருண அருண ஒளி மணியே - பன்னிறங்களோடு கூடியனவும் சிவந்தனவுமாகிய நவமணிகள் வடிவானவளே.

12 வன்னம் ஒன்ருய் இரண்டாகி
வளர்ந்தோ ரைந்தாய் எட்டாகி
வன்னய் வானின் வளிக்கனலாய்
வனமாய்ப் பாராய் வகைஐந்தாய்ப்
பன்னும் மறையோர் நான்காகிப்
பரந்த சாத்ர முடன்ஆருய்ப்
பதினெண் புராண ஆகமங்கள்
பரிந்தோ ரிருபத் தெட்டாகி
உன்னி நெடுமால் அயனுலும்
உலகை வகுக்கக் காப்பாற்ற
உடனே சங்கா ரித்திடவும்
உமையா ளொடுதன் கேள்வனுமாய்
மன்னி நிதமும் ஆட்டிவைத்த
மதலாய் இமவா னுடைமகளாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*12. வன்னம் - எழுத்து. வன்னம் ஒன்ருய் - ஓம் என்னும் பிரணவம் ஒன்ருகி. இரண்டாகி - அகார உகாரமாகிய இரண்டாகி. ஐந்தாகி - பஞ்சாட்சரங்களாகி. வளியாய் கனலாய் எனப் பிரித்துக்கூட்டுக. வனம் - நீர். பார் - பூமி. வகை ஐந்தாய் - மண் முதலிய பூதங்களுக்கும் வகையாகிய தன்மாத்திரைகள் ஐந்தாகி. மறைஓர் நான்காகி - நான்கு வேதங்களாகி. அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. சாத்திரம்ஆருய் - தர்க்கம், வியாகரணம், மீமாஞ்சை, சந்தோபிசிதி, நிருத்தம், சோதிடம் என்பன. பரிந்து*

13 தந்தை தாயார் சுற்றத்தார்
சகல வாழ்வும் உனதருளே
தமியேன் செய்யும் வினைஉனது
சடலம் உனது உயிர்உனது
சிந்தைக் கிசைந்த அடிமைஎன்று
செகத்தில் எவர்க்குந் தெரியாதா
சிந்தா மணியே எனக்குவருஞ்
செயலே உனது செயல்அலவோ
சொந்த அடிமை கிடந்தலையச்
சும்மா இருந்தால் உனைவிடுமோ
சோதி வதன மணிவிளக்கே
துவாத சாந்தப் பெருவெளியே
மைந்தன் எனவந் தாண்டருள்வாய்
வனச வதனி நவசரணி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

ஓர் - விரும்பி ஆராயப்படுகின்ற. உன்னி - எண்ணி. வகுக்க - படைக்க. கேள்வன் என்றது சங்கரனை. ஆட்டிவைத்த - இவ்வண்ணமாக மூவரும் மூன்று தொழில்களையும் செய்ய இயக்குவித்த. மதலாய் - பிள்ளையே.

13. சடலம் - உடல். உயிர், உடல், வினை எல்லாம் அம்மையினுடையது என சரணாகதி கூறியது. 'அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும் குன்றேயனையாய் எனையாட்கொண்டபோதே கொண்டிலையோ' என்பது மணிவாசகம். செயல் - வினை. வனச வதனி - தாமரைபோன்ற திருமுகமுடையவள்.

14 பேயேன் ஊமை விழிக்குருடு
பேணுஞ் செவிடு கால்முடமாய்ப்
பிள்ளை எனவே ஈன்றவர்க்குப்
பிரிய விடவும் மனமாமோ
நாயேன் செய்யும் வினைமுழுதும்
நலமாய்ப் பஞ்சுப் பொறிஎனவே
நகர்த்திச் சிவத்துள் எனதுளத்தை
ஞானப்பதியுள் சேர்த்தருள்வாய்
ஆயே அமலை அருட்கடலே
அகிலா தார முடிவிளக்கே
அணங்கே இணங்கும் அடியவர்கட்(கு)
அமுதஞானம் அருள்அரசே
மாயே செகமோ கனமான
வடிவே முடிவே மலைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

நவசரணி - நுகர்வார்க்குப் புதுமையாகவே என்றும் தோன்றும் திருவடிகளை உடையாள்.

14. பஞ்சுப்பொறி எனவே நகர்த்தி - பஞ்சுப்பொதியினுள்ளே வைத்த தீப்பொறியைப்போல அழித்து. உளம் - உயிர். 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்' என்றதும் காண்க. அமலை - அநாதியே மலமில்லாதவள்; அண்மைவிளி. அகிலம் - உலகம். மாயே - மாயையின் வடிவானவளே. செகம்மோகனம் ஆன - உலகம் அனைத்தையுமே மயங்கச் செய்கின்ற தன்மைவாய்ந்த.

15 எண்ண அடங்கா தெனதுசென்மம்
ஏட்டில் எழுதி முடியாது
இடிப்பார் நீண்ட மரம்போலும்
எமனூர் பதியில் அடைந்துடைந்து
பெண்ணின் மயக்கம் வினைமயக்கம்
பிறவி மயக்கம் தொலையாது
பித்தர் சாலப் புலையருடன்
பேய்கொண் டடிமை அலைவேனோ
வண்ணக் கலையே கதிமுதலே
வனசப் பதியே அதிமதுர
வனமே கனமே யோகியர்கள்
மனமேய் குடியே வாரிதியே
மண்ணிற் ககன முடிநடுவுள்
வாதா டியபே ரொளிவிளக்கே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

15. இடிப்பார் நீண்டமரம்-இடிகரையில் இருக்கிற மரம்; என்றது என்றும் எக்கணமும் அழிவுவரலாம் என்பதை எண்ணி. பேய் கொண்டு - பேய்பிடித்த வன்போல் மயங்கி. வண்ணக்கலை - பல தன்மைகளை யுடைய அல்லது பல எழுத்துக்களால் இயன்ற கலை ஞானம். வனசப்பதியே - உள்ளத்தாமரையிலிருக் கும் தலைவியே. வனம் - சோலை. கனம் - மேகம். மனம் ஏய் குடி - மனத்தில் பொருந்திய குடியே. வாரிதி - கடல். ககனம் - ஆகாயம்.

16 பறந்த பறவை நாற்காலாய்ப்
படரும் விலங்கும் ஊர்வனவும்
பாணி தனில்வாழ் சீவர்களும்
பாரில் நிலையாத் தாபரமும்
பிறந்த மனிதர் தேவரொடு
பிசகா தெடுத்த செனனமதில்
பெற்ற தாயார் எத்தனையோ
பிறவி மனையாள் புதல்வர்களும்
நிறைந்த கோடா கோடி இதில்
நிலையா னதுவும் ஒன்றறியேன்
நீயே தாயென் றநுதினமும்
நெறியே அருளிப் பிறவியினி
மறந்து விடவும் உனதுபய
வனச மலர்த்தாள் ஈந்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*16. பாணி - நீர். இப்பகுதி நால்வகைத்தோற்றத்து எழுவகைப் பிறவிகளையும் பேசுகின்றது. உனது உபய வனச மலர்த்தாள் எனப்பிரிக்க. உபயம் - இரண்டு. வனச மலர்த்தாள் - தாமரைமலர் போன்ற திருவடிகள்.*

17 சடத்தை எடுத்து மயல்நிகழ்த்தித்
திகைப்பில் உயிரும் அகப்படவும்
தேசா சார அதிமோகத்
திருக்கில் மனமும் உருக்கமுடன்
கடத்தை எனதென் றபிமானக்
கருமா மயிலா ருடன்ஆசைக்
காத லதனில் உயிர்மறந்து
கலங்கித் தியங்கி அலேவேனே
நடத்தை அறியாப் பரிபாக
ஞக்கி உன்றன் இருபதத்தை
நம்ப மனத்தில் உறுதியொன்ருய்
நாட்டி எனேயோ ராளாக்கி
மடத்தை அரிய வலிந்தழைப்பாய்
மதிவாள் நுதலே மலேமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

17. சடம் - உடல். திகைப்பில் - அறிவு திரிந்த திகைப்புநிலேயில். திருக்கு - மாறுபாடு. கடம் - பாலே வனம்; ஈண்டு அதுபோன்ற பயனற்ற வாழ்க்கையை உணர்த்தியது. உயிர் மறந்து - உயிராகிய தன்னே யும் மறந்து. உயிர்கள் மலத்திற் கட்டுண்ட பெத்த நிலேயில் தன்னேயும் அறியாது தலேவனேயும் அறியா தாகலின் இவ்வண்ணம் அருளினர். நடம் - உலகில் நிகழும் கூத்துக்கள். மடத்தை அரிய - அறியாமை யைப் போக்கியருள.

18 காவே இலங்கும் பொன்னிநதிக்
கரையே இலங்கும் மயிலைநகர்
கங்கை முதலாம் புனிதநதி
கருதிப் பணியும் மூதூரே
பாவே இலங்குங் கவிவாணர்
பகரும் மறைவே தாகமங்கள்
பயிலும் வீதிக் கமுகிளநீர்
பாயும் வாழை குருந்தேறும்
ஆவே இலங்கு வயல்சூழும்
அதிலே நானு விருக்ஷமுடன்
அமுத ரசமாய்க் கனிபழுக்கும்
அருகிற் பறவை யினஞ்சூழும்
மாவே இலங்கும் அநுதினமும்
மருவுங் கயிலை சிகரான
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*18. கா - சோலை. இலங்கும்-விளங்கும். பொன்னி. காவிரி. கங்கை முதலான புனித நதிகள் யாவும் இங்கு வந்து இத்தலத்தில் துலாமாதத்தில் காவிரியில் நீராடித் தத்தம்பாவங்களைப்போக்கிக்கொள்கின்றன என்பது தலபுராண வரலாறு. குருந்து - குருத்து; மெலித்தல் விகாரம். நானுவிதவிருக்ஷம்-பலவிதமான மரங்கள்.*

*மா - திருமகள். இலங்கும் மா அநுதினமும் மருவும் மயிலாபுரி என்க.*

19 என்ன மயக்கம் இதுபுதுமை
இதையா ருடனே யான்உரைப்பேன்
எடுக்க முடியா வினைச்சுமையை
ஏழைத் தலைமீ தெடுத்தேற்றி
மன்னிப் பிறக்க இடமும்இன்றி
வாகாய் நடக்க வழியுமின்றி
மயக்கக் கொடுவேல் முனைக்கானில்
வனவே டர்கள்செந் நாயுடனே
என்னை மறிக்கக் கொடுமையுடன்
எழுந்தே உழுவை பாய்ந்திடவும்
இதிலே மயங்கி அலைந்திடவிட்(டு)
எங்கே ஒளித்தாய் ஈஸ்வரியே
வன்ன மயிலே எனக்குரைத்த
வசன மதுபொய் யானதென்னோ
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

19. ஏழை - அறிவிலி. மன்னி – நிலைபெற்று. வாகு ஆய் - வசதியாக. மயக்கமாகிய கொடிய வேலாகி, முள்ளையுடைய காட்டில் என்க. உழுவை - புலி. வன்னம் - அழகு.

பதினெட்டாம் பாடல் பத்தொன்பதாம் பாடல் என்ற இருபாடல்களும் சில பிரதிகளில் முன்பின்னாக மாறிக் காணப்படுகின்றன.

20 பாகு சேருங் மொழியணங்கே
பணத்தை அணியுஞ் சதுர்த்தோளி
பாதி மதியுங் கதிரணியும்
பரம ஞான வெளிச்சுடரே
ஆகும் பருவம் அறிந்தென்றன்
ஆவி நாளும் உபயபதம்
அடுத்துக் கவிதைச் சரந்தொடுத்தே
அமைந்து பொழிய வரம்தருவாய்
ஏகு மயக்கத் துட்டருடன்
இனிதா எனைச்சேர்த் தகற்றுதே
இமவான் அளித்த திருமகளே
எங்கும் நிறைந்த பெருவெளியே
வாகு பொருந்துங் கிருஷ்ணனது
வரிசைத் துணைவி சுகவதனி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

20. பாகு - வெல்லப்பாகு. சேரும் - ஒத்த. பணம் - பாம்பு. பணம் - படம்; ஈண்டு அதனையுடைய பாம்பிற்காயிற்று. சதுர்த்தோளி - நான்கு தோள்களையுடையவள். வாகு - நேர்மை. கிருஷ்ணனது வரிசைத் துணைவி என்றது தனக்குத் துணையாக இருப்பதையும் குறித்தவாறு. கிருஷ்ணன் - கிருஷ்ணவதாரம் கொண்ட திருமால். துணைவி - சகோதரி. சுகவதனி - இன்பந்தரும் திருமுகமண்டலமுடையாள்.

21 விதியின் முறைமை எத்தனைநாள்
வினையிற் படுவ தெத்தனைநாள்
விசுவா சிக்கக் கொடுமைபல
விளையும் பகையும் எத்தனைநாள்
அதிக வினையும் எத்தனைநாள்
அற்ப வாழ்வும் எத்தனைநாள்
அதிலே குரோதித் திருப்பதெலாம்
அழியும் வகையும் எந்நாளோ
பொதிகை மலையன் அரிஅயனும்
புகழ்சேர் காமன் திசைப்பாலன்
போற்றும் உன்றன் இருசரணம்
பொருந்தி மகிழ்வ தெந்நாளோ
மதியைத் தரித்த முகில்வேணி
மயிலே குயிலே வான்மணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

21. விசுவாசிக்க - அன்பு செய்ய. குரோதித்து - சினந்து. பொதிகை மலையன் - அகத்தியன். மதி - சந்திரன். முகில் வேணி - மேகம்போன்ற கூந்தல்.

'ஆதித்தன் அம்புலி அங்கி குபேரன் அமரர் தங்கோன்
போதிற் பிரமன் புராரி முராரி பொதியமுனி
காதிப் பொருபடைக் கந்தன் கணபதி காமன்முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர் தையலையே'

என்ற அபிராமியந்தாதிப்பாடலை இப்பாடலின் பிற்பகுதி நமக்கு நினைவூட்டுகிறது. வான்மணி - சூரியன்.

22. சிந்தா மணியின் பூசைசெய்தால்
செகத்தில் எவர்க்கும் குறைவருமோ
செல்வ முடனே கல்விஅருள்
திரளாய் விளையும் என்பவெலாம்
முன்று ஞன போதிலேயே
முதல்வி உன்றன் அருளுலகில்
மூழ்கிக் கனமாய் வினையிருளும்
முறியப் படர்ந்து மறைந்ததுபோல்
இந்தா எனவே நீகொடுத்த
இயல்பே யல்லால் மானிடரோ(டு)
ஏற்கை சேர்க்கை அவர்உரைத்த(து)
ஏதா கினும்உண் டோஉரையாய்
மைந்தா எனவே அமுதளித்த
வகையை நீயும் மறந்தாயோ
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

22. சிந்தாமணியின் - சிந்தாமணி மந்திரத்தினுல். இப்பாடலின் முதலிரண்டடிகள்,

'தனந்தரும் கல்வி தருமொரு நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்கில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன வெல்லாந் தருமன்பரென்பவர்க்கே
கனந்தருங் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே'

என்ற அபிராமியந்தாதிப்பாடலை நினைவூட்டுவன. தான் முன் ஆனபோது - அம்மையாகிய தனக்கு முன்னே அடியேன் ஆனகாலத்து.

கனமாய் - மிகுதியாக. ஏற்கை - ஏற்றல். சேர்க்கை - தானுகச்சேர்ந்தது. எல்லாம் அபயாம்பிகையின்

23 வெகுநாட் பழைய அடிமையென
மிகவுங் கனிந்தே அருள்அளித்து
வெளியைக் காட்டிக் களிப்புடனே
விம்மி விழிநீர் சொரிந்தருளத்
தருமெய்ஞ் ஞானச் சாரமெலாந்
தந்தோம் தந்தோம் என்றுரைத்த
தாய்தான் மறந்தால் உலகில்இனித்
தானர் பகைஆர் என்செய்கேன்
புகழ்நா ரணியே உன்னைவிடப்
பொருளும் அருளும் வேறுண்டோ
பொல்லா தவனே யானாலும்
பிள்ளை இவனென் றருள்புரிவாய்
வகுத்த சேயைப் பால்கொடுத்து
வளர்க்கா திருக்கும் தாய்உண்டோ
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

அருளால் விளைந்தனவன்றிப் பிறர் கொடுத்தனவும் சேர்ந்தனவும் பிறர் உரைத்தனவும் இல்லை என்றவாறு. மைந்தா எனவே அமுதளித்த வகை என்றது இந்த நூலாசிரியர் திக்கற்ற குழந்தையாக இருந்தபோது அம்மையார் பாலூட்டிப் பேணிய திருவருட் குறிப்பை வியந்தது.

23. வெளி - சிதாகாயம். இனித்து ஆனர் பகை ஆர் - இனிமையுடையவர்களும் பகைவர்களும் யார்? வகுத்த - பெற்ற.

24 சோத்ர வழியால் வருவினையும்
தொக்கு வழியால் வருவினையும்
தொடருஞ் சட்சு வழியாலும்
சொல்நா வுடனே ஆக்ராணம்
பார்த்த வழியிற் கரணமதைப்
பற்றி உயிரைக் கலங்கடித்துப்
பண்ணும் வினையும் வெகுகோடி
பாழ்போ னதுவும் வெகுகோடி
ஆற்றில் கரைத்த புளிஎனவே
ஆயிற் றொருவர்க் குதவியின்றி
அடியேன் முன்னாள் ஒருவருக்கும்
ஆகா தவனே அதைஇனித்தான்
மாற்ற வகையும் அறியாயோ
வகுத்த எனையும் மறந்தாயே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிழைத்தாயே.

---

24. சோத்ர வழியால் - காதின்வழியால். தொக்கு - தோல்; உடல். சட்சு - கண். சொல் நா - பேசுகின்ற நாக்கு. ஆக்ராணம் - மூக்கு. பார்த்தவழியில் - நோக்கிய வாயிலாக. கரணமதை - அந்தக்கரணங்களை. அவையாவன மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. கலங்க அடித்து என்பது கலங்கடித்து எனத் தொகுத்தல்விகாரம் பெற்றது.

25 நாளோ வினையோ வீணாளோ
நானா தொழிலுக் கானதுவே
நலஞ்சேர் நிட்டைக் குதவிவரும்
நாழி யொன்றா யினும்இலையோ
சூளைக் குயவன் விதிவசத்தால்
துக்க சுகமும் தொடர்ந்துவரத்
துன்மார்க் கத்தால் வந்ததென் றுஞ்
சொல்வார் பாரில் சூழ்மனிதர்
வேளைக் கிசைந்த மொழிபேசி
வினையிற் புகுந்த சுகம்போதும்
வினையை ஒழித்தே அமலசுக
வெளியைப் பொருத்தி வினைப்பிறவி
மாளும் படிநீ அருள்புரிவாய்
வாலாம் பிகையே வான்மணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

25. நாட்கள் வினை செயற்கும், வீண்நாளாகவும் பலவேறு காரியங்கட்கு ஆயினவே. நானாதொழில் - பலவேறுதொழில். சூளைக்குயவன் என்றது படைத்த பிரமனை உருவகித்தது. பார் - பூமி. வினைவயத்தால் அடியேன் அடைந்துள்ள இப்பிறவியை அகற்றி அருள் செய்ய வேண்டும் என்பதாம்.

26 எந்தன் நினைப்பும் இனிக்கடந்தே
ஏக வெளியின் நிலைதொடர்ந்தே
இரவும் பகலும் அற்றஇடம்
இனிதா கியபே ரொளிவிளக்கே
சந்திக் கரையின் முடிவேற்றித்
தனையுந் தலைவன் அடிசேர்த்துச்
சாட்சாத் கார பூரணமாய்ச்
சர்வா னந்த மாயிருக்க
உந்தன் இருதாள் மலர்க்கருணை
ஒளிசேர் கனகக் கிரிமுடிமேல்
உதித்தாய் எனது வினை[illegible]வும்
உமையே இமையோர்க் கரசான
மந்த்ரக் கலைச்சி நவகோணம்
வாழும் யோக நாயகியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*26. சந்திக்கரை - புருவநடு. மந்திரக்கலைச்சி - மந்திரக் கலையை ஆளுபவள். நவ கோணம் - ஒன்பது கோணசக்கரம்; 'ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே' என்ற அபிராமியந்தாதிப்பாடற் பகுதியை எண்ணச்செய்கிறது இது.*

27 காமக் கிரிபீ டத்தழகி
கனக சபையில் நடனமிடும்
காத்யா யனியே கவுமாரி
காமேஸ் வரியே ஈஸ்வரியே
பூமி தேவி நான்முகவன்
புனித மனைவி இந்த்ராணி
புகழ்நா ரணியும் தினம்பணியும்
பூர்ண கலையே கதிமுதலே
சோமன் உதய மணிநுதலே
சுருதி ஞான முடிமுதலே
துவாத சாந்த நிலையாளே
சுகமே ஞான மணிவிளக்கே
வாம நயனி அதிரூபி
வனசா கினியே மாமணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

27. காமக்கிரிபீடம் - காமகலாபீடம். சோமன் உதயம் மணி நுதல் - மதிமண்டலத்து வாழ்கின்ற அழகிய நெற்றியை உடையவள். வாம நயனி - அழகிய கண்களையுடையவள். வன சாகினியே - கதம்ப வனத்தில் வசிக்கும் சாகினித்தெய்வமே.

28 மூலத் துதிக்கும் ஞாயிறுமாய்
முளரி யிதழ்வாய்ச் சதுர்முகனுய்
மூல வுந்தித் திருமாலாய்
மூளுங் கால காலனுமாய்
மேலுற் றருளுஞ் சதாசிவனும்
விரியும் இதழொன் றருள்பரையும்
வித்தா ரமுமாய் உலகனைத்தும்
விரிவாய் நின்ற விரிசுடரே
ஞாலத் தமைந்த இருபதமும்
நடனச் சிலம்பும் கிண்கிணியும்
நணுகிப் பெருகும் இந்துநதி
ஞான நதியாம் பரமநதி
மாலற் றவர்க்கும் உதவிநிற்கும்
மதுர வசனி நவசரணி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

28. முளரி - தாமரை. விரியும் இதழ் ஒன்று அருள் பரையும் - மலர்ந்த இதழ்களுடைய சகஸ்ராரத்திற் பொருந்திய அருட்சத்தியும். வித்தாரமும் ஆய் - பரந்தபொருளாய். நணுகி - அடைந்து. இந்துநதி - மதியமுதம். பரம நதி - மேலான ஆறு. மால் - மயக்கம். சரணி - கால்களையுடையவள்.

29 ஏன்முன் மயக்கத் திருவினையும்
மிடியும் வகையும் போதாதோ
ஏழை தனையே பகைப்பவர்கள்
இருமா நிலத்திற் சலுகையுண்டாய்
நான்முன் பெரியன் என்றுரைத்த
நாவும் வாயும் அடைத்தெமனூர்
நகரிற் பயண மாகிவர
நடத்தாய் கருணைச் சுடர்விளக்கே
தான்முன் செய்த வினைமுழுதும்
தனக்கே யன்றி மனக்கவலை
தன்னுற் போமோ என்மனத்துத்
தளர்ந்து புழுங்கும் என்செய்கேன்
வான்முன் பரவுந் திரிபுரையே
மௌனு தீத மலர்க்கொடியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

29. ஏன்தான் - ஏனோ. மயக்கத்து - அறியாமையால். வான் - பெருமை. மௌனுதீத மலர்க்கொடியே - மோனநிலை கடந்த இடத்தில் முளைத்த மலர்க்கொடி போன்றவளே.

30 கள்ள மயக்கங் தொடராமல்
கவலைப் பிணிகள் அடராமல்
கனவை நனவாய்த் தொடர்ந்தடர்ந்து
கரைய விழியின் புனலாருய்த்
துள்ளி மனந்தான் மிகச்சலனந்
தொடுத்துத் தொடுத்தே அலையாமல்
சுகமாய் உன்றன் இருபதத்தைத்
தொண்டன் மனத்துட் கொண்டருள்வாய்
உள்ள படியே மனத்தடத்தில்
ஒன்ருய் வாழுங் களியமுதே
ஓங்கா ரத்துக் குள்ளிருந்தே
உயர்ந்த கமலா சனத்தரசே
வள்ளல் இடத்தி அருள்மயத்தி
வனச முகத்தி கனகசத்தி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

30. அடராமல் - வருத்தாமல். சலனம் - அசைவு. மனத்தடம் - மனமாகிய இடம். ஓங்கார பீடம் மூலாதாரமாதலின் அங்கிருந்து முளைத்த இருதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் அரசே; என்றது ஆதாரசக்தியினின்று எழுந்த தாமரையின் பொகுட்டில் சிவசக்தி எழுந்தருளியிருக்கின்ருர் என்பதை அறிவிக்கின்றது. வள்ளல் இடத்தி - சிவபெருமான் இடப்பாகத்து இருப்பவளே.

31 பெரியோர் எவரைப் பழித்தேனே
பிரம தவத்தை அழித்தேனே
பெற்ற தாயார் பசித்திருக்கப்
பேணி வயிற்றை வளர்த்தேனே
அரிய தவத்தோர்க் கிடைஞ்சல்செய்தே
அற்ப ரிடத்தில் சேர்ந்தேனே
அறியா மையினால் என்னகுற்றம்
ஆர்க்குச் செய்தே னேஅறியேன்
கரிய வினைதான் எனதறிவைக்
கலங்க வடித்து முடிச்சதையுங்
கரைக்க வுன்றன் கருணையினால்
கடாக்ஷம் பொருந்த அருள்புரிவாய்
வரிவில் புருவ மடமானே
வதனம் புயவா லாம்பிகையே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*31. பிரம தவம் - அந்தணர் நோன்பு. பெற்ற தாயார் பசித்திருக்க என்பது 'ஈன்றாள் பசிகாண்பா ளாயினும்' என்ற குறட் பகுதியை நினைக்கச்செய் கிறது. கரிய வினை - அறியாமையால் விளைந்த தீவினை. அறியாமைக்கு நிறம் கருமையெனல் மரபு. கடாக்ஷம்- கடைக்கண்பார்வை. முடிச்சு - வினைக்கூட்டம். வதன அம்புய வாலாம்பிகையே - தாமரைபோன்ற திரு முகத்தினையுடைய அபயாம்பிகையே.*

32 கனத்த மலையை எடுத்தணுவாய்க்
காலால்ஊன்றி மீதுவைத்தால்
கால்தான் தாங்க வசமாமோ
கருணு நிதியே இனிஉனது
சினத்தை மகன்மேற் பொருத்திநின்ருல்
சிறியேன் பொறுத்து நிலைப்பேனே
சிவையே உனது தயவுவரச்
செய்வாய் இனிஅஞ் சுகஇனமே
தொனித்த மறையின் முடிவிளக்கே
சோதி வதனச் சுடரொளியே
சுத்த வியோம மண்டலத்தில்
சுகமாய் வளரும் துரந்தரியே
மனத்துள் அழுக்கை அகற்றிஉன்றன்
மலர்ப்பா தமதில் சேர்த்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

32. அம் சுகமே - அழகிய கிளியே. தொனித்த - ஒலித்த. வியோமம் - ஆகாயம். அழுக்கு - காமம் வெகுளி மயக்கம் முதலிய குற்றங்கள்.

33 கிளியே அருண வொளிச்சுடரே
கிருபா னனமா முழுமதியே
கெடியாம் உன்றன் இருபதங்கள்
கிடைக்கும் வகையும் பெறுவேனே
ஒளியா யிருக்குங் கனகசபை
ஒன்றே இரண்டே விபரிதமே
உரைக்குங் கருணை நிதியிலே
உதித்த பரம னுடன்ஆடும்
அளியா ரமுதே பரம்பரையே
அணுவில் அணுவாய் அண்டபிண்டம்
அமர்ந்த சிவமே ஞானவெளிக்(கு)
அரசே வேதத் துட்பொருளே
வளியே சுழியில் நடமிடுகண்
மணியே எளியேற் கினியருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*33. கிருபை - கருணை. கெடி - சிறப்பு. கனகசபை ஒன்றே - கனகசபையில் எழுந்தருளியிருக்கும் சிவபரம் பொருளான ஒன்றே. இரண்டே - ஆனந்தவல்லி உமை யாகிய நீயும், ஆனந்தக் கூத்தருமாக இரண்டாக இருப்பவளே. விபரிதமே - ஒன்றும் அன்றி இரண்டும் அன்றி இருப்பவளே. சுழி - சுழுமுனைநாடி.*

34 கவலைக் கடலில் வினையலையில்
கனத்த மனமா கியமடுவில்
னைகநீச் சாக நீந்தஎன்றால்
கரைதான் அடுத்துக் கிட்டவில்லை
சவலை மலையில் இடர்படவும்
தகையும் வெகுளி மகரமது
தாவி வரவும் கைப்பிடிக்கத்
தாளு தரவும் இல்லாமல்
குவளை விழியில் புனல்பெருகக்
கோகோ எனயான் அழுதுநின்றால்
குறித்துன் னருள்தோ ணியில்ஏற்றிக்
கொண்டே கரையில் சேர்த்தருள்வாய்
மவுனச் சிவனார் இடப்பாகம்
வளரும் கருணை நிதிமயிலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*34. சவலமலை - நடுக்கமாகியமலை. இடர் - துன்பம். தகையும் - தடுக்கும். வெகுளி மகரம் - கோபமாகிய சுறுமீன். கவலைக்கடலில் வீழ்ந்து துன்புற்று அழுகிற போது உனது திருவருளாகிய தோணியில் ஏற்றி அடியேனைக் கரைசேர்த்தருளுவாய் என்பதாம்.*

35 நல்லார் நடக்கும் வகைஅறியேன்
நான்நான் எனவே உலகமதில்
நாடு வீடு மாடுமக்கள்
நம்பு மனையாள் வாழ்வதனில்
பொல்லா வறுமை பொருந்திவரப்
புல்லர் தம்பால் வருந்திநின்று
பொழுதை வீணுக் கழித்தொழித்துப்
பொய்யாம் உடலம் வீழ்ந்துவிடில்
எல்லாம் எனதென் றிருந்தவெல்லாம்
எள்ள ளவும்பின் தொடர்வதில்லை
இவற்றில் நிறுத்தி மயக்குவதை
யானே அறியேன் விதிவசத்தால்
வல்லா ணவத்தால் அழியாதென்
மனத்தில் குடிகொண் டாண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*35. புல்லர் - இழிந்தமக்கள். ஒன்றாலும் அழியாத தாய் ஆன்மவியாபகத்தை மறைத்து வருவினையையும் மேல்வினையையும் விளைவித்து நிற்பதால் வலிய ஆணவம் என்றார்.*

36 அடியார் செய்யும் வினைதனக்கோர்
அருள்செய் துவந்து காக்கிலையோ
யான்மாத் திரந்தான் உன்றனுக்கே
ஆகா தவனாய்ப் போனேனோ
படிமேல் முன்செய் தவக்குறையோ
பத்தர் தமக்குத் தீம்புசெய்த
பாபந் தானோ அறியாமற்
பலவாய் என்றன் உயிர்மறுகி
முடியாக் கலக்கம் கொள்ளவைத்து
மூழ்க அடித்தால் என்செய்கேன்
மோச மான இருவினையில்
முளைத்தே எழுந்த செனனமதை
மடியக் கருணை இனிஅருள்வாய்
புவனை வாலை திரிபுரையே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

36. படி - பூமி. தீம்பு - தீமை. மறுகி - கலங்கி. மூழ்க அடித்தால் - திளைக்கவைத்தால். வினையால் விளைவது பிறவியாதலின் வினையில் முளைத்தெழுந்த செனனம் என்றார். 'ஊழிவினையால் வரும் உடலும்' என்பர் பின் 42-ம் பாடலிலும்.

37 எங்கும் சரியாய் நீ இருந்தே
ஏற்றல் குறைச்சல் பேதகற்றி
என்னுருயிரை இப்பிறப்பில்
எடுத்தாட் டியதும் அறியேனே
சங்கம் ஆழி தரித்தவளே
சகல உயிர்க்கும் உயிர்க்குயிராய்த்
தானய் இருந்த தவப்பொருளே
தமியேன் செய்த வினைமுழுதும்
மங்கும் படியே நீபார்த்து
மடங்காக் ககனப் பெருவெளியில்
மாறு தருணக் கமலமதில்
வாழக் கருணை நீஅருள்வாய்
வங்கங் கொழிக்கும் பொன்னிநதி
வளர்ந்த புனலா றிசைந்துவரு
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

37. பேதகற்றி - வேறுபாட்டைப் போக்கி. மடங்காக் ககனப் பெருவெளி-எல்லாவற்றையும் தன்னகத் தடக்கிக்கொள்வதன்றித்தான் ஒன்றிலும் அடங்காத ஆகாயம். அருண கமலம் - செந்தாமரை. வங்கம் - கப்பல்.

38 ஓல மிடவும் அமலையுந்தான்
உறுதி மனத்திற் பொருந்தவில்லை
ஒருநா ழிகையா யினும்மிடியன்
உபய பதத்தை நினைத்ததில்லை
காலும் அறிந்து நினதடியார்
கருது மொழியும் கேட்டதில்லை
கனவா கியசம் சாரமெனுங்
கடலி னிடைவீழ்ந் தலைமோத
நீல இருளில் விழிக்குருடாய்
நின்றே மயங்கிக் கிடப்பேனை
நீதான் கிருபை பொருந்தியுன்றன்
நெறிதான் அளித்து நிலைவைப்பாய்
வாலை வடிவே ககனமுடி
வான திருவே மலைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*38. அமலை - மலமற்றவளாகிய உமை. மிடியன் - வறுமையுடையவன். அடியார் கருதும் மொழி - உன்னுடைய திருமந்திரங்கள். சம்சாரத்தைக் கனவு என்றது தோன்றி மறைதலின். ககன முடிவான திரு - பரவெளியைக் கடந்துள்ள பராசத்தி.*

39 ஆண்ட வளும்நீ யாமாகில்
அழகு துரைச்சி நீயாகில்
அருணன் நிறத்தி நீயாகில்
அமுதச் சிவத்தி நீயாகில்
பூண்ட இமயா சலத்தின்உயர்
பொன்னே நீதா னுமாகில்
புகழ்ந்தே எனக்குன் அருள்முலைப்பால்
புசிக்கக் கொடுத்த தாயாகில்
நீண்ட புகழ்உன் சமயமெனும்
நெறிதந் ததுவும் நிசமாகில்
நிலத்தில் எனையே பகைத்தகற்ற
நேரிட் டிருப்பார் பேருடலம்
மாண்டு விடவே அருள்புரிவாய்
வாரா கினியே அருள்மணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*39. அருணன் - உதயசூரியன். அமுதச் சிவத்தி - அமுதம்போலும் மிக இனிய சிவசத்தி. முலைப்பால் புசிக்கக் கொடுத்த தாய் என்றது இவருக்குக் குழந்தைப் பருவத்தில் அம்மை இவரது தாயைப்போல வந்து பால் கொடுத்ததைக் குறிப்பித்தவாறு.*

40 அலையில் துரும்பாய் மனம்அலைய
அனலில் மெழுகாய் மனம்உருக
அளிந்த பழம்போல் உடல்தளர
அருவி விழிகள் புனல்சொரிய
கலையில் அறிவும் பிசகிநின்ற
கலக்க மதனை அகற்றிஒரு
கனஞ்சேர் உன்றன் இணையடியைக்
காண வசங்கொண் டிருக்கவைப்பாய்
சிலையைப் பிடித்த கரத்தழகி
சிவத்தி தவத்தி பவம்அகற்றி
செயமே தரித்த மனோகரத்தி
சிந்தா மணிரத் னாபரணி
மலையில் உதித்த நவபீட
வாசம் உறைமா யேஸ்வரியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

40, அலை - கடல். கலை இல் அறிவு - கலைஞானம் இல்லாத அறிவு. கனம் - பெருமை. கனம் சேர் - மேகத்தை ஒத்த வள்ளன்மை உடைய என்றுமாம். சிலை - கருப்புவில். நவபீடவாசம் - ஒன்பது கோணங் களாகிய பீடத்தில் வசித்தல். 'நவ கோணம் வாழும் யோக நாயகியே' என்றார் முன் 26-ம் பாடலிலும்.

41 உடலும் பகைக்க அகம்பகைக்க
ஒக்கப் பிறந்தார் மனையாட்டி
உடனே பகைக்க ஊர்பகைக்க
ஒழிந்த பெரியோர்க ளும்பகைக்கக்
கடலும் பகைக்க நிலம்பகைக்கக்
கனல்கால் ககன முடன்பகைக்கக்
கருதி இருக்கும் வேளைஇதைக்
கண்டா யோஎன் மாதாவே
சடலந் தனையே பகைப்பதல்லால்
சர்வ மூல முதல்விஉனைத்
தானே பகைக்க இக்கயவர்
தம்மா லாமோ தார்குழலே
அடலம் பரையே உனைஅடுத்தேன்
வந்தென் றனைநீ காத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

41. அகம் - மனம். கடலும் பகைக்க என்பது முதல் ஐம்பூதங்கள் மாறுபடலை உணர்த்துகிறார். சர்வமூல முதல்வி - அனைத்திற்கும் வித்தாயிருப்பவள். தார் குழல் - மாலை அணிந்த கூந்தலை உடையவள். அடல் - வலிமை. அம் - அழகு.

42 உற்றார் பெற்றார் தமைவேண்டேன்
ஊழி வினையால் வரும்பொருளும்
உடலும் வேண்டேன் செழித்திருக்கும்
ஊரும் உலகு மதைவேண்டேன்
சற்றா யினும்இவ் வுலகிலுள்ளே
தனுவா திகளும் வரல்வேண்டேன்
தன்னை அறிய அறிவருளுந்
தாயே உன்றன் இருபதங்கள்
பெற்றார் அடிஎன் சிரமதனில்
பிரியா திருக்கும் வகைவேண்டிப்
பிடித்தேன் எனது மனவுறுதி
பிசகா திருக்க வரம்அருள்வாய்
மற்றா ரையும்நான் நம்பவில்லை
வரையின் மகளே உனைஅடுத்தேன்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

42. ஊழி வினை - முறைமையாக நியதிதத்துவத்தால் பொருந்தும் வினைகள். உடலும் பொருளும் ஆன்மாக்களுக்கு வினையால் பொருந்துவன ஆகலின் இங்ஙனம் கூறினார். தனுவாதிகள் - உடல் முதலியன. வரையின்மகள்-மலையரசன் மகள். உன் திருவடியைப் பற்றிய ஞானிகளின் பாத கமலங்கள் என் தலையில் எப்போதும் அகலாதிருக்க விரும்புகின்றேன்; அந்த மன உறுதியில் சிறிதும் தளராதிருக்க அருள்செய்க என்பதாம்.

43 ஒன்றோ டொன்று நெருங்கிஇந்த
உடலை விலக்கி உயிர்நெகிழ
உற்றகால மதனில் எனக்(கு)
உனது பதங்கள் எதிராக
நின்றே எனக்குன் அருள்அளிப்பாய்
நிதியே கருணைக் கடல்மயிலே
நேரில் அமைந்த தற்பரையே
நித்யா னந்த மானவளே
அன்றே அனைத்தும் ஒன்ருக
அரனு ரிடத்தில் இருப்பவளே
அடர்வில் புருவ மணிநுதலே
அமுதே என்றன் அகத்துயிரே
மன்றே பொருந்தும் இருபாதம்
மறவா திருக்க வரம்அருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

43. ஒன்றோடு ஒன்று நெருங்கி - ஐம்பூதங்களும் தம்முள் ஒன்றோடொன்று அடர்த்து. உயிர் நெகிழ உற்றகாலமதனில் . . அருள் அளிப்பாய்: இப்பகுதி,

'வவ்விய பாகத் திறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியந் தீர்த்தென்னை யாண்டபொற் பாதமு மாகிவந்து
வெவ்விய காலனென் மேல்வரும்போது வெளிநிற்கவே'

என்பதை நினைவூட்டுகின்றது. அனைத்தும் ஒன்ருக என்றது சர்வ சங்காரகாலத்தில் அம்மையும் சிவத்தி

44 ஐம்பத் தோராம் அக்ஷரத்தி
அகிலாண் டத்தி அந்தரத்தி
அமல சுகத்தி அருள்மயத்தி
அருண நிறத்தி அம்பரத்தி
எண்பத் தோராம் பதங்கடந்த
ஏக வெளிச்சி காரணத்தி
இமயா சலத்தில் வந்தருளி
இருநா ழிகைநெற் கொண்டுலகில்
உம்ப ரடியார்க் கறம்வளர்த்த
உமையே அருள்வா ரிதிமாதே
உனது பதத்தை அடியேனும்
உரைத்து மகிழ வரம்அருள்வாய்
மண்பூத் தலருங் கமலமதில்
வளருங் கனமே கொடிஅனமே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

னிடம் ஒடுங்கும் நிலையை உணர்த்தியவாறு. அடர் - நெருங்கிய. மன்று - கனகசபை.

44. ஐம்பத்தோராம் அக்ஷரத்தி - அகாரம் முதல் க்ஷகாரம் ஈறுன 51 எழுத்துக்களை வடிவாகக்கொண்டவள். அந்தரத்தி - ஆகாயமே வடிவானவள். அம்பரத்தி - அழகிய பராசத்தி. எண்பத்தோராம் பதம் கடந்த ஏக வெளிச்சி - வியோம வியாபினி முதல் சிவாயநம: என்பதீறுன எண்பத்தொருபத மந்திரங்

45 மண்ணுல் கரகந் தனைப்பிடித்து
வாரி யெடுத்துத் தலைமீது
வைத்தே ஆடும் பூசாரி
மனம்போல் எனது மனம்உவந்து
அண்ணாந் திருந்து குறிபார்த்தே
அசையா திருக்கில் அசைந்துருகி
அமுத தாரை ஒழுகிவர
அதனுட் பொழுதை செலுத்தஅருள்
ஒண்ணுங் ககன முடிப்பொருளே
உள்ளச் சிவமே நவரசமே
ஒன்று யூக மனத்துயிராய்
உயிருக் குயிராய் இருந்தவளே
வண்ண லயமே ஞானவெளி
வனமே எனைவந் தாண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

களையும் கடந்த துவாதசாந்தப் பரவெளியில் தங்கி யிருப்பவள். காரணத்தி - எல்லாவற்றிற்கும் பரம காரணமாயிருப்பவள். கமலம் - தாமரை. அனம் - அன்னம். இருநாழிகை நெற்கொண்டுலகில் உம்பரடி யார்க்கு அறம் வளர்த்த உமை என்றது, காஞ்சிபுரத்தில் இறைவன் கொடுத்த இரண்டு படி நெல்லை வேளாளரிடம் கொடுத்துப் பெருக்கி முப்பத்திரண்டு அறங்கள் செய்வித்த வரலாற்றை உட்கொண்டது.

45. ஒண்ணும் என்பது ஒன்றும் என்பதன் மரூஉ. ஒண்ணும் ககனம் - ஒன்றான ஆகாயம். நவ ரசம் -

46 அவகா லத்தில் மனமும்எனக்(கு)
அடங்கா தெழுந்தே எழுந்துவிம்மி
அகத்தைப் படைத்தே உனதுதிரு
வருளங் தாதி தனைமறந்து
பவமா மயலா ருடன்சேர்ந்து
பண்ணும் வினைநான் என்சொல்கேன்
பார்க்கப் போனல் அதற்கொருவர்
பகையார் உறவார் உலகமதில்
சிவமா யிருந்த சமுத்திரத்தைத்
திரிபாய் நினைக்கு மிதன்வலுமை
தேய்த்தே உனது திருவருளைத்
திறமாய்ப் பெறவே வரமளிப்பாய்
மவுன தீத அலர்கொடியே
வனமூ லிகையே பூரணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

ஒன்பது காவியச் சுவைகள். வண்ணலயமே - எழுத்து அனைத்துக்கும் உறைவிடமானவளே.

46. அவகாலம் - வீணன காலம். பவம் ஆம் - பிறப்பை விளைவிக்கின்ற. சிவமாயிருந்த சமுத்திரம் - பரந்துபட்ட எல்லை காணமுடியாத சிவபரம்பொருள். திரிபு - ஒன்றை மற்ருென்ருக நினைத்தல்.

47 வினையின் பயனே பயன்அதனை

வெறுத்துத் தறிக்கப் போகாதோ

வெய்யோன் உதயத் தெதிர்பனியும்

விம்மிச் சுரந்து வளர்ந்திடுமோ

நினையும் நினைப்பும் அதற்காதி

நீயும் உனது பதியோனும்

நிசமாய் எனது வசமானால்

நில்லா தெந்த வெவ்வினையும்

தனையே அறிந்தால் இன்பதுன்பத்

தடைதான் வந்தால் அதுநிகரோ

தகைவோர் இவைகட் கஞ்சுவரோ

தாயே மிகுந்த சவுந்தரிஉன்

மனையே அறியக் கருணைபுரி

மணிநா தாந்தத் தனிச்சுடரே

மயிலா புரியில் வளரீசன்

வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

47 வினையின் பயனே பயன் - யான்செய்த தீவினைகளின் பயன்தானு அடியேன் அடையத்தக்க பயன். அதனை வெறுத்துத் தறிக்கப் போகாதோ - அதனைத் தேவரீர் வெறுத்து வெட்ட அது என்னை விட்டுத் தொலைந்துவிடாதா ? தொலைந்துவிடுமே என்பதாம். தகைவோர் - தடுப்போர். மிகுந்த சவுந்தரி - பேரழகோடு கூடியவள். உன்மனையே எனப் பிரிக்க.

48 கனிந்து கனிந்துன் றனைப்பாடிக்
கசிந்தே இருகண் புனல்பெருகக்
காது உபயம் உனதருளாம்
கதையைக் கேட்க உனதடியார்
இனந்தான் உறவாய் மனம்புதைய
எந்த நாளும் அவர்இருந்த
இடத்தை இருதாள் சுற்றிவர
இரவும் பகலும் நினதருளை
நினைந்த படியே சிந்தைசெய்யும்
நெறியை உதவி எனைக்காப்பாய்
நித்யா னந்தப் பழம்பொருளே
நிமலி அமலை புகழ்விமலி
வனைந்த சடலத் தொழில்உனது
அடிக்கே இதமாய் அருள்புரிவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

48. காது உபயம் - இரண்டு காதுகள். 'இரு காது அவனைக் கேட்க' என்ற திருவந்தாதியைச் சிந்திக்க. உனது அடியார் இனந்தான் உறவாய் என்றது 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என்ற திருவாசகத்தைக் கருதச்செய்கிறது. வனைந்த சடலம்- படைக்கப்பட்ட உடல்.

49 குலந்தான் நலந்தான் குடியிலுள்ள
குணந்தான் கனந்தான் எமதெனவே
கொள்ளும் கயவர்க் கதுவசனங்
குலவும் உன்றன் இருபதத்தைச்
சிலந்தி யிழைபோல் அறிவுருகச்
செகத்தில் கண்டு பிடித்தவர்க்குச்
செகதூ ஷணிப்பும் நகைப்பும்என்ன
செய்யும் அவரை மலர்க்கொடியே
அலர்ந்த முளரி முகத்தாள்உன்
அடிமை யான நாயேனை
யார்தான் நகைத்தும் பழித்தும்என்ன
ஆதி கிருஷ்ணன் றன்துணைவி
மலர்ந்த மனமார் அடியவர்பால்
வளரும் ஒளிசேர் நிலமாதே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

49 கயவர் - கீழோர். செகம் - உலகம். செகதூ ஷணிப்பு - உலகமக்கள் சொல்லுகின்ற பழிச்சொல். நகைப்பு - பரிகாச வார்த்தை. முளரி - தாமரை. மலர்ந்த மனம் - விரிந்த மனம்.

50 நீர்மேல் குமிழி யாம்உடலை
நிலையாம் எனவே கயவரெல்லாம்
நின்று புவியில் தனம்தேடி
நீள மயக்கால் மிகவாடிப்
பார்மேல் பெரியோர் தமைப்பழித்துப்
பண்ணும் வினைகள் வெகுகோடி
பாவி யர்கள்பாற் சேரா துன்
பதமே கதியாய்ப் பதித்துவைப்பாய்
கார்மேல் பொருது மதிக்கதிரே
கனகா பரணி மணிப்பிறையே
ககன முடியில் வளர்ந்தெழுந்த
கஞ்சா சனத்து நிலையாளே
வார்மேற் பொருது மலர்க்குயத்தி
வானில் வளரும் முகில்வேணி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

50. கார் - மேகம். ககனம் - ஆகாயம். கஞ்சாசனம் - பத்மபீடம். வார் - கச்சு. குயத்தி - தனங்களை உடையவள். முகில்வேணி - மேகம்போன்ற கூந்தலையுடையவள்.

51 ஏழை எனையே காக்கவகை
எடுத்த உன்றன் இதயமெலாம்
இரங்கி இரங்கிச் சலித்துமதி
எனையே குறிக்கப் பொருந்திலையோ
சூழ உன்றன் இருபதத்தைச்
சுகமாய் மனதில் பொருத்திஇன்னஞ்
சொந்த அடிமை யாக்கிலையோ
சும்மா இருப்ப தென்வகையோ
ஆழி யமுதை அடுத்தவருக்(கு)
அகத்திற் பசியும் உண்டாமோ
அமுத வருஷம் பொழிந்திடில்என்
அதிட்ட மதிலோர் குடையாக
வாழப் பிடித்தால் உன்னைஎன்னல்
வசனித் திடவாக் கினைத்தருவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*51. ஏழை - அறிவிலி. சலித்து - அலுத்து. அமுத முண்டார்க்குப் பசியுண்டாகுமா என்பது பழமொழி. அமுத வருஷம் - அமுதமழை. அமுதமழை பொழிந்தால் அதிஷ்டக்குடை பிடித்தால் உன்னைத் தோத்திரிக்க வாக்குத்தருக என வேண்டுகின்றார். ஆழி - கடல். வசனித்திட - தோத்திரிக்க.*

52 கொடுங்கை தன்னுல் எடுத்தசிறு
குழந்தை தனைத்தாய் எறிவாளோ
கோபங் கொண்டால் யான்நிகரோ
குலவுங் கருணை நிலையாளே
அடங்கி உனது கோபமெலாம்
அகற்றி எனது பரிதாபம்
அறிந்துன் னருளைப் பாலித்தே
ஆள்வாய் வேத விழுப்பொருளே
தொடங்கும் பரமன் இடப்பாகத்(து)
ஒளிரு மணியே அணிப்பணியே
தொலையாச் செனன அலைஅகலத்
தோற்றும் உனது துணைப்பாதம்
அடங்கத் தெரிய மனம்அடங்க
வாரிக் கருணை பொழிந்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

52. கொடுங்கை - வளைந்த கை. அணிப்பணியே - பணியை அணியாக உடையவளே. பணி - பாம்பு. தொலையாச் செனன அலை - நீங்காத பிறவியாகின்ற அலை. துணைப்பாதம் - இரண்டு திருவடிகள். அடங்கத் தெரிய - முழுதும் தெரிய.

53 கான லதனைப் புனலாகக்
கருதி நினைக்கும் மானதுபோல்
கவலை யுடனே குடும்பமெனும்
கனவா கியபொய்ம் மாயைதனில்
ஈன ருடனே இருந்துசொல்லி
எல்லாம் எமதென் றெயிலாக
இறுமாப் படைந்து மனம்வீணு
யிரிந்து கலங்கித் திரியுமையோ
நான்நான் எனவே மகிழ்ந்திருந்த
நடத்தை யகலச் சிவபுரத்தில்
நாதன் கழல்கள் உணர்வினுள்ளே
நடுவாழ்ந் திருக்க அருள்புரிவாய்
வானு னந்தத் தவக்கொடியே
வனச முகத்தி வாள்நுதலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

53. கானல் - பேய்த்தேர். பேய்த்தேரை நீரெனக் கருதுவது மானின் இயல்பு. ஈனர் - இழிந்த மக்கள். வான் - உயர்ச்சி. வனச முகத்தி - தாமரைபோன்ற திருமுகம் உடையவள்.

54 நிலம்கால் ககனம் கடல்அனலும்
நீள இருந்த நெறிச்சுடரே
நிரவி உலகெங் கினும்உயிராய்
நிறைந்தே யிருந்த தவப்பொருளே
பலகா லமும்உன் இருபதங்கள்
பாடிப் பாடிக் கசிந்துருகி
பரவும் விழிகள் புனல்ஆருய்ப்
பெருகி எனது மனம்உருகக்
கலையும் நிலையும் தெரிந்திருக்கக்
கனவாய் உலகம் மறந்திருக்கக்
கபிலைப் பசுவுங் கதறிமிகக்
கன்றைத் தேடி வருவதுபோல்
மலமா யாதி அகலஎன்பால்
வந்துன் னருட்பால் தந்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

54. ககனம் - ஆகாயம். நிலம் கால் ககனம் கடல் அனலும் நீள இருந்த நெறிச்சுடரே என்பது ஐம் பூதங்களிலும் கலந்துள்ள ஒளியே என்பதை விளக் கியவாறு. நிரவி - கலந்து.

55 எந்த நாளும் உனதருட்பே
ரழகை அறிவில் ஒருபிடியா
யிருத்தி மகிழ்ந்து கனககிரி
ஏறி முதல்வன் ஈசனது
சிந்தை மிகுந்து புகழ்ந்துவரச்
செல்வ முடனே கல்விவரச்
செகசா லங்கள் தமைக்கடந்து
சிற்சொரூப மனம் புணர்ந்து
வந்துன் றுதை முடியருளும்
மௌன னந்தச் சுடர்விளக்கே
மாலா கியகிருஷ் ணன்துணைவி
வனச மலரின் நிலையாளே
மைந்த னிடம்வந் தெனைக்காப்பாய்
மணியே யோக ஒளிமணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

55. பிடியால் - பிடியளவினதாக. கனககிரி - மேரு; என்றது மேருப்பிரஸ்தாரமான ஸ்ரீசக்கரத்தின் உச்சியை. இருத்தி, மகிழ்ந்து, ஈசனது சிந்தை ஏறி, புகழ்ந்துவர, கல்விவர, மனம் கடந்து, புணர்ந்து, வந்து அருளும் விளக்கே எனமுடிக்க.

இப்பாடல் சில பிரதிகளில் நாற்பதாம் பாடலாக அமைந்துள்ளது.

56 கொஞ்சுங் கிளியே அருள்பழுத்த
கொம்பே கதம்ப வனத்தில்வளர்
குயிலே இமயா சலத்தில்வருங்
கொடிவான் மதியே பேரொளியே
அஞ்சு தொழிலுக் கதிகாரி
அதிமோ கனமே மாமாயை
அமுத வசனி நான்மறைக்கும்
அடங்கா தகண்ட பெருவெளியே
விஞ்சு புகழ்சேர் திருமகளும்
வேதன் மனையா ளொடுநிதமும்
மிகுந்து பணியும் அரிஅயனும்
விபுதர் முனிவர் மறையோர்கள்
வஞ்சி யேஉன் பதங்காண
வகையும் அறியார் வளமயிலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

56. வேதன் - பிரமன். அவன் மனைவி கலைமகள். அரி-திருமால். அயன் - பிரமன். விபுதர் - தேவர்கள். 'அரி அயனும் ... போற்றும் உன்றன் இருசரணம்' என்றார் முன் இருபத்தொராம் பாடலிலும்.

57 ஏதோ கன்ம விவகாரம்
இதனால் உயர்த்தி தாழ்த்திஎன
இறந்தும் பிறந்தும் நரகமதில்
இருந்து மனது சஞ்சலிக்கப்
பேதா பேதம் மிகப்பேசிப்
பெருமை சிறுமை இதனாலே
பெற்ற சுகந்தான் இனிப்போதும்
பிரியா துன்றன் இருசரண
வேதாந் தவருட் கமலமதை
விருதாப் பிடித்துக் கருதிநிற்க
வெட்ட வெளியோன் ஏகனுடன்
விளங்கக் கருணை நிலைஅருள்வாய்
மாதா வேமெய்ஞ் ஞானமுதே
மறையின் முடியில் வளர்பவளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

57. உயர்வு தாழ்வு பெருமை சிறுமை என்ற வேற்றுமைகள் மனோவிகாரம் என்பதை அறிவித்தவாறு. சரண கமலம், அருட்கமலம் என இயைக்க. விருது - விருதுகள். வெட்டவெளியோன் - பராகாச வடிவினனாகிய பரசிவம். மறைமுடி - உபநிடதம்.

58 சோற்றுத் துருத்தி வெகுபுழுக்கள்
சுகமா யென்றன் அகம்எனவே
சொல்லி வளருங் கருங்காடு
சூளைக் குயவன் உத்தியினல்
பார்த்துப் பிடித்த பழம்பாண்டம்
பகைத்தே ஏமன் றுனுடைக்கும்
பனங்காட் டிலுறை நரிநாய்கள்
பருந்தும் விருந்தாய் அருந்திமகிழ்
ஊற்றைப் பிணத்தை எனதெனவே
உகந்து நின்ற சுகம்போதும்
உனது பதங்கள் என்மனத்துள்
உறவே கருணை மிகஅளிப்பாய்
மாற்றென் றில்லா அருட்கனக
வரையின் முடிமேல் வளர்பவளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

58. துருத்தி - பை. அகம் - வீடு. கருங்காடு - கரிய காடு. சூளைக் குயவன் என்றது உடலைப் படைக்கின்ற பிரமனை. உத்தி - யுக்தி. ஏமன் - இயமன்.

59 எடுத்த செனனம் இறக்குமுன்னே
என்சிந் தையுள்நீ வரவேண்டும்
இரவும் பகலும் உனதடியை
ஏத்தும் வரம்நீ தரல்வேண்டும்
அடுத்துக் கலக்கும் இருவினைகள்
அறவே சிவத்தில் உறவேண்டும்
அனுட்டா னுதி தன்னையிழந்(து)
அமல சுகத்தைப் பெறவேண்டும்
தொடுத்த படியே எனைச்சார்ந்து
தூக்கி எடுத்து நடுவணையில்
சுகமா யிருப்ப வரம்அருள்வாய்
துவாத சாந்த நிலையாளே
மடுத்த கனத்தி நின்மயத்தி
மடலே கருணைக் கடலாளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

59. சிவம் - பரம்பொருள். அனுட்டானுதி - கிரியைகள். கிரியை என மருவும் யாவையும் ஞானம் அடைதற்கு வாயிலாதலின் ஞானம் பெற்றபின் கிரியை முதலியன தாமே கழலும் என்ற நுண்கருத்தை அனுட்டானுதி தன்னை இழந்து அமல சுகத்தைப் பெற வேண்டும் என்பதால் தெரிவிக்கின்ருர் ஆசிரியர்.

60 உந்திக் கமலத் துறைபவளே
ஓங்கா ரத்தி சதுர்க்கோணத்(து)
ஒளிரும் இதய நிலையாளே
உமையே கமலா சனமணியே
சிந்தித் திடவே அறுகோணஞ்
செறிந்த மனையின் நிலையாளே
செயமோ கினியே டாகினியே
சிந்தா மணியே யோகினியே
சந்தித் திடவே உன்னிருதாள்
தனையே அருள்வாய் தற்பரையே
சகல மகவான் திருக்கிருஷ்ண
சாமி துணைவி பார்வதியே
வந்தித் திடவே தேவரெலாம்
மகிழத் தோற்றும் மலர்க்கொடியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*60. உந்திக்கமலம் - மூலாதாரம். சதுர்க்கோணம்- மூலாதாரத்திலுள்ள நாலிதழ்த் தாமரைக் கர்ணிகையில் உள்ள நாற்கோணசக்கரம். இங்கே குண்டலினியாகச் சக்தியிருக்கிருள் ஆதலின் இங்ஙனம் கூறினர். அறுகோணம் - இருதயமாகிய அநாகத சக்கரத்தில் உள்ள அறுகோணத்தில் ஈசுவரனுக்கு மனைவியாக ஹாகினி என்னும் சக்தி இருப்பதை இரண்டாமடி முதற் பகுதியால் உணர்த்துகின்ருர். சகலமகவான் - எல்லா யாகங்களுக்கும் தலைவன்.*

61 முகம்பார்த் தொருவர் பேசாமல்
முனிவோர் முன்னே அரக்கர்போல்
முடியப் பழித்த பழிப்பாலே
முனையும் மழுங்கி என்றனுயிர்
அகந்தான் உருகும் இனிஅதைத்தான்
ஆரோ டுரைப்பன் அருட்கடலே
அதிக வினையேன் அற்பருக்கே
அனைத்தும் வசிய மாகுமையோ
சகந்தான் நகைத்தால் ஞானிஎன்பர்
தமியேன் பருவம் பொருந்தாமல்
தாயே உனையான் வேண்டும்வரம்
தயைசெய் திருத்தி எனதுளத்தில்
மகனும் எனவே அருள்புரிவாய்
வடிவே ஞான மறைமுடிவே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

61. சகம் - உலகம். அகம் - மனம். முனை - அறிவின் கூர்மை. முனிவோர்-கோபிப்பவர்கள். பருவம்-பரிகாசம்.

62 அரசே என்றன் அகத்துயிரே
அமுதே கருணை மதிநுதலே
அகண்டா காரப் பெருவெளியே
அமல சுகமே அந்தரமே
உரைசேர் மறையின் முடிமுதலே
உணர்வே உணர்வின் ஒளிச்சுடரே
ஓத வறியா அதிசயமே
உமையே இமையோர்க் கரசான
தரைசேர் தண்டைச் சிலம்பணியுந்
தாளி பணிகள் அணிதோளி
தருணம் இதுவே சிவபுரத்தி
சர்வா னந்த பரம்பரத்தி
வரிசை இமயா சலத்திலுறை
மயிலே எனக்குன் அருள்புரிவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

62. அந்தரம் - ஆகாயம். மறையின் முடி - உபநிடதம். தரை சேர் தாள், சிலம்பு அணியும் தாள் எனக் கூட்டுக. பணிகள் - பாம்புகள். தருணம் - சமயம்.

63 ஒன்றே ககன முடிமுதலே
ஒளியே வெளியே அகண்டிதமே
உலகா சாரங் கடந்துநின்ற
உமையே அமல சுகப்பொருளே
என்றே உலகம் அனைத்துயிர்க்கும்
இரவும் பகலும் எங்கெங்கும்
இருநா ழிகைநெற் கொண்டுலகை
இசைய வளர்த்த மலர்க்கொடியே
தன்றே மூலா தாரமுதல்
தாவும் புருவ நடுவரையில்
தழைத்த பரமே நிராமயமே
சாகா வேகாப் பூரணமே
மன்றே நடனம் இடும்சரண
மயிலே குயிலே சிவபதியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*63. ஒன்றே ககன முடிமுதலே-ஒன்றான பராகாயத்தின் முடிவாகவும் முதலாகவும் உள்ளவளே. அகண்டிதமே - எல்லையற்றவளே. உலக ஆசாரம் கடந்து நின்ற உமையே என்பது உலக ஒழுக்கத்தைக் கடந்து நின்ற ஞானநிலையிலிருக்கின்ற உமையே என அறிவித்தவாறு. 'உலகினை இறந்து நின்றது அரனுரு என்பதோரார்' என்பது சித்தியார். தன்றே என்பது எதுகைக்காக எடுத்தாண்ட சொல். இருநாழிகை நெற்கொண்டு உலகைவளர்த்த செயலை முன் 44-ம் பாடலிலும் குறிப்பித்துள்ளார்.*

64 ஆய்ந்த உன்றன் அருள்நூலை
அடுத்தே இழையைத் தொடுத்தெடுத்து
அதனைக் கயிறு கவேமுறுக்கி
அலையும் மனத்தை இறுக்கியுன்றன்
தோய்ந்த சிவக்கால் தனைப்பூட்டித்
தொண்ணூற் றாறு கருவிமயல்
தொடுத்த சடத்தை இகழ்ந்துனது
துவாத சாந்த வெளிதனிலே
பாய்ந்த படியே குடியாகப்
பலசொப் பனமும் கண்டுவிடப்
பதத்தைக் கடந்தே இதத்துடனே
பரம ஞர்ந்த சிவபுரத்தில்
வாய்ந்த வாஞ்சை யுடன்புகழும்
வானே வானோர் தொழுந்தேனே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

64. அருள்நூல் என்றது வாமாகமங்களாகிய தந்திரசாத்திரங்களை. தந்திரசாத்திரங்களை இழையாகக் கொண்டு அதனைக் கயிறுக முறுக்கி, மனத்தைக்கட்டி, திருவடியிற் சேர்த்தி என உருவகித்தவாறு. சடம் - அறிவற்றபொருள்; இங்கே உடலை உணர்த்திற்று. வாஞ்சை - விருப்பம்.

65 அருளுக் கறிவா யிருந்ததெய்வம்
அமர்ந்த திருநாட் கொடியேறி
அலங்கா ரமுமாச் சித்தமெனும்
அமைகே டகத்தில் எழுந்தருளி
மருளும் மனதைப் பலிகொடுத்து
வரிசை யுடனே நடுவீதி
வரையிற் பலவாம் அதிசயங்கள்
வகைதான் உரைக்க முடியாது
சுருளப் பிரியா ரதம்ஏறிச்
சோதி வதன ஒளிதாண்டிச்
சுத்த வியோம நிலையதனில்
சுகமாய் நிறுத்திக் கொடியிறக்கி
மருளற் றிருக்க அருள்புரிவாய்
வாலாம் பிகையே காரணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

65. இப்பாடலால், கொடியேற்றம் முதல் கொடி யிறக்கும்வரை ஒரு திருவிழாக் காட்சியாக உருவகிக் கிறார். அறிவு கொடி, சித்தம் கேடகம், மனம் பலி, சுழுமுனை நடுவீதி, சகஸ்ராரம் தேர், வியோமநிலை உச்சி அதாவது தேர்நிலை இவ்வாறு காண்க.

66 ஊசி நுனியில் மனதைஉன்னி
உயர்ந்த மனிதர் மயிர்பதினு(று)
ஒன்றும் நுழையா இடத்தில்தமர்
ஒடுங்கி அடங்கிக் குறிபார்க்கில்
காசிப் புனலும் நிறைந்தகங்கைக்
கரையுங் கடந்து திரைகடந்து
கனக மணியின் ஒலிகடந்து
கருணைக் கடலுங் தான்கடந்து
பேசும் பருவம் உரைகடந்து
பெருமை சிறுமை தமைக்கடந்து
பேயி னுடனே பேயனுமாய்ப்
பிரமை கொண்டே அறிவழிந்து
வாசித் தடமே கடந்துநின்ற
மௌனா னந்தம் எனக்கருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

66. ஊசி - புருவமத்தியாகிய சுழுமுனையின் உச்சி. மயிரைப் பதினாறு கூறாக்கி அதன் ஒருகூறும் நுழையாத மிக நுணுகிய இடமாகிய சுழுமுனையின் மத்தியில் அடங்கி உற்றுநோக்கினால் கங்கையும் அதன் கரையும் அலைகளும் தோன்றும்; மணிநாதம் கேட்கும்; அதனைக் கடந்தால் கருணை கடல்போலப் பரந்து தோன்றும்; அதனைத் தாண்டின் பேச்சற்று, பெருமை சிறுமையற்று, அறிவழிந்து, பிராணன் ஒடுங்கியிருக்கின்ற மவுனானந்தநிலையைத் தமக்கு அருளவேண்டுகின்றார் ஆசிரியர். இது தம் அனுபவம் கூறியது.

67 செல்லும் மனமும் அடங்கியபின்
சென்றே ஊமைப் பருவமது
சேர வரவே அறிவழிந்து
செகத்தோர் நகைத்துப் பகைத்திடவும்
அல்லி முளரித் தடந்தாண்டி
அருண வுதய ரவிதாண்டி
அடங்கி யிருக்கச் சிவபுரத்தில்
அடியேன் குடியாய் நிலைக்கஅருள்
நல்ல கமல முகத்தாளே
நந்தி விடையோன் இடத்தாளே
நறுமா மலர்ச்செஞ் சடையாளே
நதிகள் பெருகும் பதத்தாளே
வல்ல பரையே பரம்பரையே
மௌனா தீத மோகனமே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

67. இப்பாடல் பேசாப் பேயர்நிலையில் உலகம் நகையாடும் என்பதும், பகைகொள்ளும் என்பதும் அறிவிக்கிறது. அல்லி - அகவிதழ். முளரி - தாமரை. தடம் - குளம். அருண உதய ரவி - சிவந்த உதயகால சூரியன். இது அனுபவ ஞானிகளுக்கு விசுத்தியில் தோன்றும் கோடிசூரியப் பிரகாசத்தைக் குறிப்பிடுகின்றது.

68 அடர்ந்த ககன முடியினிலோர்
அமுத நதிதான் பெருகிவர
அதனைப் புசித்துப் பசிதணித்து
அடியேன் மனந்தான் லயமாகத்
தொடர்ந்து சிவமே அநுக்ரகித்துத்
தொல்லை வினையைப் பறக்கடித்துத்
தொலையாச் செனன வழிதொலைத்துச்
சுகமா யிருக்க அருள்புரிவாய்
படர்ந்த அருண மணிநுதலே
பரம சுகவா னந்தமதில்
பாவம் அகன்ற மனத்துள்வளர்
பத்மா சனியே வான்மணியே
மடந்தைப் பருவம் உடையாளே
வளர்மின் கொடிபோல் இடையாளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே

---

68. அமுதநதி - மதியமுதம். அருணமணி - சிவந்த ரத்னம். நுதல் - நெற்றி. பாவமகன்ற மனம் - பாவனை நீங்கிய அதுவே தானான மனம். பத்ம ஆசனி - தாமரையை இருப்பிடமாக உடையவள்.

69 அணுவுக் கணுவா யிருக்கும்உனை
அறிய வசமோ அருட்கடலே
யார்தான் அறிவார் அரிபிரமன்
அவரால் அறியா அதிசயத்தாயே
குணமற் றகன்ற நிரஞ்சனமே
குறியற் றிருந்த பரம்பரமே
கொள்ளைப் பிறவி தனையகற்றுங்
கொடியே ககன மின்கொடியே
கணுவற் றகண்ட அருட்கரும்பே
கண்ணின் மணியே மணியினுள்ளே
கலங்கா திருந்த ஒளிச்சுடரே
கருணைக் கடலே நவமணியே
மணமுற் றெளிர்பூங் கமலமிசை
வளருந் திருவே மலைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*69. கொள்ளை - மிகுதி. கணு அற்று அகண்ட அருட்கரும்பே - கணு இல்லாத எல்லையற்ற திருவருட் சுவையினையுடைய கரும்பே.*

70 நெஞ்சிற் சபலம் பொருந்தாது
நிலையை அறிவால் உணர்ந்தொன்றாய்
நின்னை நினைக்கப் பொன்னதனில்
நெறிமாற் றுயரும் வண்மைஎனப்
பஞ்சுப் பொறிபோற் பவம்அகலப்
பலவாம் நினைவு களும்அகலப்
பரிந்தென் பால்வந் தருள்புரிவாய்
பரமா னந்த சுகப்பொருளே
அஞ்சும் உடலா யிருப்பவளே
ஆறுங் கடந்த பரம்பரையே
அமுத வசனத் திருக்கிருஷ்ணன்
ஆதித் துணைவி அந்தரியே
வஞ்சி நவமோ கனரூபி
வதனம் புயத்தி அருள்மயத்தி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

70. சபலம் - ஆசை. நெறி மாற்று - முறையான மாற்று. பரிந்து-விரும்பி. வதனம்புயத்தி - தாமரை போன்ற திருமுகம் உடையவள். அஞ்சும் - பூதங்கள் ஐந்தும். ஆறும் - ஆதாரங்கள் ஆறும்.

71 பச்சை முழுப்பொன் னிறமுடனே
பளிங்கு பவள முடன்நீலம்
பருத்த மேக முடன்ஆருய்ப்
பரவி யிருக்கும் பசுங்கிளியே
அச்ச மறவே அதன்மீதில்
அருண வுதய ரவிகோடி
அகண்டா கார ரூபமதாய்
அமர்ந்த சிவமோ கனமாதே
செச்சை யதன்மேல் அணிச்சிலம்புஞ்
சிறுகிண் கிணித்தண் டைகளொலிக்கச்
சிவனே டிருக்குங் கொலுமுகத்தைச்
சிறியேன் காண அருள்புரிவாய்
வச்ச உனது பொருள்எனக்கு
வரத்தாற் கருத்தில் உரைத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

71. செச்சை - செம்மை; ஈண்டுப் பண்பாகு பெயராய்ச் சிவந்த திருவடியை உணர்த்திற்று. அருண உதய ரவி - சிவந்த உதயசூரியன். சிவமோகனமாதே - சிவனது மனத்தை மயக்குகின்ற பெண்ணே. அணிச் சிலம்பு - அழகிய சிலம்பு. வச்ச - வைத்த.

72 அணங்கே நவபீ டாசனியே
அருளே உதய மதிச்சுடரே
ஆகா யத்தில் முளைத்தெழுந்தே
அலர்ந்த முளரி நிலையாளே
இணங்கும் அடியார் நினைத்தபடி
இசைந்த புவனத் தவமணியே
ஏகா கார மாகளனை
எடுத்துன் னருளைக் கொடுத்தாள்வாய்
பிணங்கு மலமா யாதிதனிற்
பிரிய விடவும் மாட்டாயே
பேரா யிரத்தி தவபுரத்தி
பேசா மோனக் கொடிமடலே
மணங்கொண் டிருக்குங் குழலாளே
வந்தென் றனையாட் கொண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

72. இசைந்த - பொருந்திய. ஏகாகாரம் - ஒரே வடிவு. அணங்கே - தெய்வப்பெண்ணே. நவபீடாசனியே - ஒன்பது பீடங்களில் எழுந்தருளியிருப்பவளே. முளரி - தாமரை. இணங்கும் அடியார் - திருவடியில் பொருந்திய மனமுடைய அடியவர்கள்.

73 குடும்பம் எனுமைக் கடல்தனிலே
குலவும் உடலா கியதோணி
குறித்தே பிரமன் வகுத்தவகை
கொள்ள மேற்கால் கிழ்க்காலாய்த்
தடம்புக் கியதோர் நாளையிலே
தடுத்து வழியோர் சுழலடிக்கத்
தா று மாரு யொருமுடுக்கில்
தானே ஒதுங்கிக் கிடக்குமையோ
திடம்புக் கிடவே நேர்காற்ருல்
சேர்ந்து வரவே கரைஒதுங்கச்
சற்றே தயவாய்ப் பார்த்தருள்வாய்ச்
செஞ்சொற் கிசைந்த திருமாதே
மடம்பார் முடிவில் நடனமிடும்
மதிசூடியபே ரொளி விளக்கே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*73. மை - கருமை. வகை - நியதி தத்துவத்தின் வாயிலாக இன்ன இன்ன வினைகளை இவ்வுயிர் நுகர்க என வகுத்தவகை. உடல் தோணி என்றதற்கு ஏற்ப மேற்காற்று கீழ்க்காற்ருய் அடிக்க ஆழமான நீர்நிலையிற் புகுந்தகாலத்து என்ருர். தடம்-நீர்நிலை. தடுத்து வழி ஓர் சுழல் அடிக்க - நெறியை மாற்றிச் சுழற் காற்று ஒன்று அடிக்க. முடுக்கு - மீளமுடியாத சந்து. திடம் - உறுதி. நேர்காற்று - கரைசேர்க்கும் ஒழுங்கான காற்று. மடு அம்பு ஆர் முடிவில் - எல்லா*

74 கல்லாக் கயவர் முகம்பார்த்துக்
காத்துக் கிடந்து விழிபுனலாய்க்
கரையக் கரைய இதம்பேசிக்
கலங்கித் திரியும் கடையேனை
நல்லூர் பதத்துக் கானஎழில்
நடத்தை அறிய எனதுமதி
நம்ப உறுதி அருள்புரிவாய்
ஞானு னந்தச் சுடர்விளக்கே
பொல்லா வறுமை தனைஅகற்றிப்
பொழுதை மறைத்துச் சரமேகம்
பொழியும் வகைபோற் கவிமாரி
பொழிய மொழிநல் வாக்களித்தே
வல்லா ளுக்கி எனைஆள்வாய்
வாலாம் பிகையே நாரணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

வற்றையும் அழிக்கின்ற நீர்நிறைந்த பிரளயகாலத்தில். இறைவன் சர்வசங்காரகாலத்து ஆனந்தநிருத்த மாடுதலின் இறைவியும் ஆடுவள் என்பது அறிவிக்கப் பட்டது.

74. நல்லோர் பதம் - ஞானிகள் செல்லும் பதவி. எழில் நடம் - அழகியசெயல்; அழகிய கூத்தும் ஆம். சரமேகம் - அம்புகளைப்பொழியும் மேகம்.

75 அரிபிர்ம் மாதி தேவரொடும்
ஆழி கடைய விடம்பிறக்க
அதனாற் பயந்தே அபயமிட
அபயங் காத்தோன் கரியுரித்தோன்
எரியப் புரத்தை நகைத்தெரித்தோன்
இறையோன் என்பர் அறியாதார்
இறையோன் உடலில் நீபாதி
இருந்தே செய்த விவகாரம்
தெரியா துலகம் அறியாதோ
சிவனார் தமக்கோர் தொழில்ஏது
தேகம் நீஉன் தொழில்எனவே
செப்பு மறைகள் அநுதினமும்
வரிவில் தரித்த மலர்க்கொடியே
வந்தென் றனையா தரித்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

75. ஆழி - கடல். பாற்கடலைக் கடைந்தகாலத்து அமரர்கள் அஞ்சிஓலமிட இறைவன் விடத்தை அருந்திப் பாதுகாத்தார் என்பது வரலாறு. இறைவனுக்குரிய தொழில்கள் அனைத்தும் சிவசத்தியின் செயலே என்பதை விளக்கியவாறு. ‘சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு புணரின் எச்செயலையும் செயவல்லதாம்’ என்ற சௌந்தரியலகரிச் செய்யுளையும் ஈண்டு நோக்குக.

76 இறைவி இருந்த அதிசயத்தை
எவரால் அறிய வசமாகும்
ஈசன் தனக்குள் தானறிவார்
இருமா நிலத்தோர் அறியாரே
நிறையுங் கடலும் நிலம்பவனம்
நெருப்பு ககனம் அறியாதே
நின்னை அறிந்தார் பிறப்பிறப்பு
நிலத்தில் திரும்ப முளையாரே
அறையஞ் சிலம்பு மிகஒலிக்க
அமுத கிரணச் செஞ்சரணி
அடியேன் அறிவுக் கோரறிவாய்
அமைந்தே இருந்த பரம்பரையே
மறையின் முடியில் நடனமிடும்
வனச மலர்ப்பூம் பதத்தாளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

76. அதிசயம் - அற்புதம். பவனம் - காற்று. ககனம் - ஆகாயம். அறை - ஒலிக்கின்ற. மறையின் முடி - உடநிடதம். தனக்குள் தான் அறிவார் என்றது சத்தியின் அனுபவத்தைச் சிவம் தானேவேறற்று அனுபவிக்கும் நிலையை உணர்த்தியது. திரும்ப முளையார் - மீட்டும் தோன்றார். அம் - அழகு.

77 கருத்தோ செலுத்தச் சல்லடைக்கண்
                களைப்போற் கலங்கி மயங்குமையோ
        கனவில் எவர்க்கும் உபகாரங்
                கருதி ஞற்போல் காணலுற்றேன்
பருத்த இருளில் விழிக்குருடன்
                பாதை அறிந்து நடப்பானே
        பதியே எனது மதிவினையால்
                படும்பா டிவையான் ஏதுசொல்வேன்
ஒருத்தர் உதவி களுங்காணேன்
                உனையே அடைந்தேன் ஒளிச்சுடரே
        உதித்த கதிர்முன் இருள்போலும்
                ஓட்டி வினையை வாட்டிடுவாய்
வருத்தம் அறிந்த தாயேஉன்
                மலர்ப்பா தத்தில் வீழ்ந்தடுத்தேன்
        மயிலா புரியில் வளரீசன்
                வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

77. பதியே - தலைவனே. கதிர் - சூரியன். பருத்த இருள் - மிக்க இருட்டு. கண்ணொளியும் சூரியஒளியும் கலந்து பொருள்விளக்கம் காணவேண்டியிருக்க மிக்க இருளும் குருட்டு விழியும் கூடுமா? ஆகவே எங்ஙனம் குருடன் வழிநடக்க இயலும் என்பதாம்.

78 சத்த பரிச மொடுருபம்
தரித்த ரசமா கனக்கந்தம்
தாவும் பொறிகள் தாம்அறியுந்
தனையே அறியும் கரணமது
உற்ற உயிர்தான் இவைஅறியும்
உயிர்தான் அறியும் அதுசாக்ஷி
உகந்த சாக்ஷி தனைஅறிய
ஒருவர் தமையும் நான்காணேன்
முற்ற அறிவை உடையோர்தாம்
முதலாஞ் சாக்ஷி தனையறிந்து
மோகா வேசந் தனைக்கடந்த
முனிவ ரானோர் இருபதங்கள்
வைத்தென் சிரசில் தியானமுடன்
மகிழ்ந்தே யிருக்கும் வகைஅருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

78. தாவும் பொறிகள் - சென்று பற்றும் பொறிகள். கந்தம் - வாசனை. கரணம் - அந்தக்கரணங்கள். புலன்களைப் பொறிகள் அறியும்; பொறிகளை அந்தக் கரணம் அறியும்; இவையனைத்தையும் உயிர் அறியும்; உயிரை, தான் என்னும் பொருளாகிய பதி அறியும்; அதுவே சாட்சியாம்; அந்தச் சாட்சியை அறிய ஒருவருமில்லை; முதிர்ந்த உணர்வுடைய ஞானிகள் முதலாம் சாட்சியை அறிந்து தியானிப்பர்; அந்த வகையை அம்மையிடம் வேண்டுகின்றார் ஆசிரியர்.

79 தனதென் றிருப்பர் உலகமதில்
தந்தை யொடுதாய் தனதாமோ
தனந்தான் தனதோ அகம்தனதோ
தழுவும் மனையாள் தனதாமோ
எனதென் றிருந்த பாழும்உடல்
இதுதான் தனதோ மனம்தனதோ
எல்லாம் உலக விருத்தியினால்
இதம்போற் கரவில் இசைந்திருப்ப
உனது பதத்தை யான்பிடித்தேன்
உணர்ந்தொத் திருக்க வகையடுத்தேன்
உடலும் மனமும் வினைவசத்தால்
ஒடுங்கித் தளர்ந்து துடிக்குமையோ
மனதின் நீங்கி எனதுவச
மாகக் கருணை யதுபுரிவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

79. தாய் தந்தை வீடு மனைவி உடல் பொருள் மனம் இவைகள் தன்னுடையன அல்ல; இவையனைத்தும் உலகவாழ்க்கையில் இன்புறுத்துவன போலப் பொருந்த உனது திருவடியைப் பற்றி நின்றேன்; இங்ஙனமாகவும் என் உடலும் மனமும் விதிவசத்தால் என்னைத் தளர்த்துகிறது என்பதாம்.

80 காண வேண்டும் இருபதத்தைக்
களிக்க வேண்டும் அநுதினமும்
கவலைக் கடலா கியவினைகள்
கரைய வேண்டும் எனைஅகன்று
தோண வேண்டும் திருக்கிருஷ்ணன்
துணைவி உனது திருக்கருணை
தோற்ற வேண்டும் நடுவணையில்
துவாத சாந்த வெளியில்மனம்
பூண வேண்டும் அருளமுதம்
புசிக்க வேண்டும் எனதுடலம்
புகழவேண்டும் அருட்கவிதை
பொழிய எனக்குன் அருள்புரிவாய்
வான மதியே அபரஞ்சி
மணையில் இருந்த சவுந்தரியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

80. அநுதினமும் - நாள்தோறும். தோன்றவேண்டும் என்பது எதுகைநோக்கித் தோணவேண்டும் என வந்துள்ளது. நடுவணை - புருவநடு. அபரஞ்சி - புடமிட்டபொன். அருளமுதம் - திருவருளாகிய உணவு.

81 அத்து விதமே சிவபுரமே
அணுவில் அணுவே அகண்டிதமே
அமுதச் சிவமே அழகொழுகும்
அருண நுதலே நவநிதியே
முத்தர் அறிவே கனகமுடி
மோனப் பதியே அதிரசத்தின்
முக்ய ரசமே நவமுடியில்
முடிந்த பரமே திருப்பரையே
சுத்த வெளியே வெளிக்குநடு
சூழ்ந்த ஒளியே ஒளிக்குமுனந்
தோயுந் திரையே திரைக்கும்அப்பால்
தோன்றும் வெளியே வளிக்கனலே
மத்த மதனப் பிரபஞ்ச
வடிவே இமய மலைமகளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*31.* அத்துவிதமே - இரண்டற்றதானபொருளே. அருணம் - சிவப்பு. கனகமுடி மோனப் பதியே - உடலாகிய மேருமலையின் உச்சியிலுள்ள மோனநகரமே. திரை என்றது திரோதானசத்தியை. மத்தமதனப் பிரபஞ்சம் - மதம்பிடித்துத் திரிகின்ற வலிய உலகம்.

82 மருத நிலத்தோன் ஒருபாலில்
வந்து வணங்கக் கனல்மறலி
வருணன் நிருதி குபேரனொடு
வாயு முடிவில் ஈசானன்
பொருந்தி வணங்க அமரர்முடி
புனையும் பதத்தி அருள்மயத்தி
பூமா தொடுவா ணியும்வணங்கும்
பொன்னு பரணம் அணிபுயத்தி
கருதும் அடியார் நினைவினுள்ளுங்
கலந்த வதனி கல்யாணி
காமக் கிரிபீ டாசனியே
கன்னி உமையே காரணியே
வருநற் பருவ மாக்கிளனை
வளர்சே வடிக்கா ளாக்கிடுவாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

82. மருதநிலத்தோன் - இந்திரன். மறலி - எமன். கனல் - அக்கினி. பதத்தி - பதத்தை உடையவள். பூமாது - திருமகள். வதனி - முகத்தை உடையவள். காமக்கிரிபீடாசனி: 'காமக்கிரிபீடத்தழகி' என்றூர் முன்னும். 27ம் பாடல் பார்க்க.

83 தக்க திரிகோ ணாசனத்தி
சகல புவன மானசத்தி
சர்வ பூத மானசத்தி
சகலா கமங்க ளானசத்தி
திக்கே உடையாய் அமர்ந்தவளே
திரிகோ ணதீ தப்பொருளே
செம்பொற் கலசத் தனத்தழகி
திவ்ய சோதி மயமான
புக்கே அடியார் சிந்தையினில்
புகழ்ந்து நடன மிடுஞ்சரணி
பூதம் ஐந்தாய் நாதாந்தப்
பொருளாய் இருந்த மலர்க்கொடியே
மக்கும் எனது மனச்சலனம்
மாற்றிக் கருணை மிகுத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

83. திரிகோணாசனம் - பிந்துவைச் சுற்றியுள்ள முக்கோண ஆசனம். திரிகோண அதீதப் பொருள் - திரிகோணத்தையும் கடந்த பிந்துவில் வசிப்பவள். மக்கும் - அழிகின்ற.

84 அனைத்தும் அகண்ட முடிவிலொன்றாய்
அருளாய்ப் பழுத்த தவப்பொருளே
அகில போக தனுகரண
மான சுகமே அற்புதமே
செனித்த பிறவித் துயரறுக்குஞ்
சீர்வாள் பிடித்த கரத்தழகி
தினமும் உனையே பணிந்தவர்கள்
சிந்தை நிலையா யிருப்பவளே
கனத்த மயிடா சுரன்சிரத்தைக்
கலங்க உதைத்த பதத்தாளே
கருணைக் கடலே பரநிதியே
கண்மூன் றுடைய கற்பகமே
மனத்துள் சலனம் அறக்கருதி
மலர்ச்சே வடியை அளித்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*84. அகிலம் - பூமி. தனு - உடல். செனித்த - உண்டான. கனத்த - செருக்குற்ற. சலனம் - சஞ்சலம்.*

85 துரங்கம் பதிறு றங்குலமே
சுகமாய் நடன மிடுஞ்சரணி
தொலையா வெளியே வெளிமுதலே
சுயம்பி ரகாச நிலையாளே
இரங்கும் அடியர் சிந்தையுள்ளே
இனிதாய் வளரும் வாரிதியே
இலகு நினைவும் உடையவளே
ஈன ரகம்விட் டிருப்பவளே
அரங்க முடிவில் நடுவணையில்
அமுதாய்ச் சொரியும் அருள்நதியே
அமல சுகத்தை அடியேனும்
அடையும் அறிவு தரல்வேண்டும்
வரங்கள் இனிவந் தருள்புரிவாய்
வனசா சனத்துள் இருப்பவளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

85. துரங்கம் - குதிரை. துரங்கம்...சரணி என்றது பூரகமாக உள்ளே இழுக்கப்படும் பதினாறு அங்குல நீளமான பிராணவாயுவாகிய குதிரையிலிருந்து சுகமாக நடனம் செய்கின்ற திருவடியுடையவள் என்பதாம். வாரிதி - கடல். அகம் - மனம். வனசம் - தாமரை.

86 உம்பர் முனிவர் முதலோர்க்கும்
உணர்தற் கரிதா யிருப்பவளே
ஓதா வேதம் உணர்பவளே
உயிருக் குயிரே ஒளிக்கொளியே
அம்பு படர்ந்த விழிப்பொருளே
அரவ முடியில் இருப்பவளே
அரனர் தினமும் நினைத்தருளும்
அடியா ருளத்துள் மணிவிளக்கே
கும்ப முனிக்கும் வியாசருக்கும்
குலவு நவசித் தாதிகட்கும்
குறித்த சனகா தியர்கட்கும்
குறிப்பை அருளும் நிலையாளே
வம்பில் பழுத்த ரசக்கனியே
மதமோ கினியே யோகினியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

86. உம்பர் - தேவர். ஓதாவேதம் உணர்பவளே: வேதம் ஓதா உணர்பவளே என மாறுக. இறைவி வேதங்களை ஓதாமலே இருந்தநிலையில் அனைத்தையும் உணர்ந்தவளாதலின் இங்ஙனம் கூறினர். அம்பு - ஆனந்தக்கண்ணீர். அரவம் - பாம்பு. கும்பமுனி - அகத்தியன். குறிப்பு - திருவருட்குறிப்பு. வம்பு - புதுமை.

87 தொந்த வினையாய் இருந்தகன்மம்
தொலைக்கு மருந்தா யிருந்தவளே
துக்க சுகமா யிருந்ததனைத்
துடைக்குங் கதியா யிருப்பவளே
அந்த கனுமா யிருந்தும்அவர்க்(கு)
அதிகா லனுமா யிருப்பவளே
அரியும் அயனு யிருந்தும்அவர்க்(கு)
அப்பா லாகி இருப்பவளே
முந்தி நடுவா யிருந்தும்அதன்
முதலாய் முடிவா யிருப்பவளே
முத்தர் சிவமா யிருந்தும்அருள்
மோனப் பதியா யிருப்பவளே
வந்தித் திடநீ வந்தெனக்கோர்
வழியைக் காட்டி ஆதரிப்பாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

87. தொந்தவினை - ஆன்மாக்களைப்பந்தித்த வினைகள். கதி - அடையப்படுபொருள். அந்தகன் - எமன். காலன் - எமனுக்குத்தலைவன். அரி - விஷ்ணு. அயன் - பிரமன். வந்தித்திட - வணங்க.

88 பூதம் ஐந்தும் சதுர்க்கரணம்
புலனே ரைந்தும் பொறிகள்பத்தும்
புகழும் வித்யா தத்துவங்கள்
பொருந்தோ ரேழும் சிவம்ஐந்தும்
பேதா பேதம் ஓரேழில்
பிடித்த தேகக் கோடியினிற்
பிறந்தும் பிறந்தே இறந்திறந்து
பேய்போல் திரிந்தே பொய்பேசிக்
காத லுடைய மனத்தையுன்றன்
கருணை விழிகொண் டினிநோக்கிக்
கவலை தணிய வரம்அருள்வாய்
கண்ணே எனது கண்மணியே
வாத மகன்ற பெருவெளியில்
வளரும் நடனத் தாண்டவத்தி
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

88. சதுர்க்கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம்என்ற நான்கு உட்கருவிகள். புலன் ஓரைந்தும்- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து விடயங்கள். பொறிகள் பத்தும் - மெய், வாய், கண், மூக்குச் செவி ஆகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்ற கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆக பத்தும். வித்யாதத்துவங்கள் ஏழு; காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. சிவம் ஐந்து - சிவதத்துவங்களாகிய சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என்ற ஐந்து. ஒரெழில் பிடித்த தேகக்

89 ஆரா ரகமும் நீயாஞய்
ஆரா அமுதும் நீயாஞய்
ஆரா ருயிரும் நீயாஞய்
யாவர் பொருளும் நீயாஞய்
பேரா யிரமும் உடையாளே
பேதா பேதம் பேசிஎன்ன
பெருமை சிறுமை நீயாஞய்
பிரியா அருளும் நீயாஞய்
நாரா யணியே பூரணியே
நளிஞ சனத்துள் நடிப்பவளே
நாட்டம் அறியா தவருளத்தும்
நடனம் புரிந்தே நிற்கிலேயோ
வாரா கினியே தயைபுரிவாய்
வாலாம் பிகையே பலவகையே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

கோடி-தாவரங்கள், ஊர்வன, நீர்வாழ்வன, பறவை, விலங்கு, மக்கள், தேவர் என்ற எழுவகையிற் பிடித்த லால்விளைந்த எண்பத்துநான்கு நூறுயிரமான தேகங் கள். வாதம்-வாய்ச்சண்டை. 'பறந்த பறவை நாற் காலாய்ப் படரும்விலங்கும் ஊர்வனவும் பாணிதனில் வாழ் சீவர்களும் பாரில் நிலையாத் தாபரமும் பிறந்த மனிதர் தேவரொடு பிசகாதெடுத்த செனனம்' என் றூர் முன் பதினுரும் பாடலிலும்.

89. ஆர் ஆர் என்பது யார்யார் என்பதன் மரூஉ. ஆரா அமுது-உண்டு தெவிட்டாத அமுதம். பேதம்

90 தட்டா துனது மொழிகேட்டுத்
தமியேன் பிழைக்கும் வழிதேடித்
தயைசெய் வதும்உன் கடன்அலவோ
தாயே கருணைக் கோர்முதலே
கட்டா யிருக்கும் உலகாய்தர்
கலங்கிப் பிரிய அருள்புரிவாய்
கமலா சனியே மாமணியே
கருணா நிதியே கற்பகமே
முட்டா திருந்த சலனமிவை
முழுதும் துடைப்பாய் முழுமுதலே
முனிவர் புகழுந் திருக்கிருஷ்ண
மூர்த்தி துணைவி மோகனமே
வட்டா காயத் தொளிர்சுடரே
வாலாம் பிகையே வந்தாள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

அபேதம் என்க. பூரணி - நிறைந்தவள். நளினம் - தாமரை; என்றது இதயதாமரையை. நாட்டம் - அகக்கண். வாராகினி - வாராகி.

90. தட்டாது - தடுக்காமல். கடன் - கடமை. உலகாய்தர் - கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்னும் மதவாதிகள். கமலம் - தாமரை. கட்டு - கட்டுப்பாடு. சலனம் - நடுக்கம். ஆகாயத்தின் வடிவு வட்டமாதலின் வட்டாகாயம் என்றார்.

91 தத்வா தீதச் சுடர்விளக்கே
தமியேன் உயிரா யிருப்பவளே
சர்வ லோக தயாபரியே
சாக்ஷாத் கார மானவளே
சித்த மோனத் தடியார்தஞ்
சிந்தை யிடையில் குடியான
சேஷா பரணி மலர்ச்சரணி
திருவே அருவே திகழுருவே
வித்தா யடியிற் கனகசபை
மேலாய்ச் சுகமாய்க் குண்டலியாய்
விளங்கா நிற்கும் அருட்கனியே
மேலோர் கீழோர் தொழுபவளே
வற்று துலவும் அருட்கடலே
மகிழ்ந்தென் றனைவந் தாண்டுகொள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

91. தத்வாதீதம் - தத்துவங்கள் எல்லாவற்றையும் கடந்து நின்றது. தயாபரியே - கருணையைத் தாங்குபவளே. சாக்ஷாத்காரம் - கண்டு துணையாயிருத்தல். சேஷாபரணி - பாம்புகளை அணியாக உடையவள். மலர்ச்சரணி - தாமரைமலர்போன்ற திருவடியுடையவள். வித்து - மூலம்.

92 அம்மா உனையே அடுத்தவர்கட்(கு)
அனைத்தும் உலக வசியம்உண்டாம்
அஷ்டாங் காதி யோகமுடன்
அடியும் முடியும் கவனம்உண்டாம்
தம்மாற் சாபா நுக்ரகமும்
சகல மூர்த்தி கரமாகும்
சடமே வெகுநாள் நரைதிரைகள்
தமையே அகற்றித் தனியிருக்கும்
சும்மா அவர்கள் விரல்அசைந்தால்
தொடர்ந்தி ரெழுபார் சுழன்றுருளும்
துக்க சுகமும் அணுகாது
சுகரூ பாதி அருளமையும்
அம்மா அதைத்தான் ஏதுசொல்வேன்
வாக்கு மனதுக் கடங்காதே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

92. உலகம் அனைத்தும் வசியம் என மாற்றிக் கூட்டுக. அஷ்டாங்காதியோகம் - இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. கவனம் - செல்லுதல். சாபாநுக்ரகமும் - சபித்தலும் கருணைசெய்தலும். சடம் - உடம்பு. எழு பார் - ஏழுலகம். சுகரூப ஆதி - இன்பவடிவாகிய ஆதிசத்தி.

93 பொன்னே நிறைந்த புதுமலரே
புகழ்சேர் மறையின் பொருள் அணங்கே
பொற்று மரைப்பூங் கமலமதில்
புகழ்ந்தே யிருக்கும் போதகமே
மின்னே பவழக் கொடிவடிவே
மேகம் அனைய கருங்குழலே
விளங்கு நவபீ டாசனியே
வித்தாய் மரமாய் மறைமுடியில்
முன்னே பழுத்த கதிப்பழமே
முதிர்ந்த மொழியிற் படர்ந்தகொடி
முதலே நுதலே குடியாக
முடிவா யிருந்த மோகனமே
அன்னே பொருந்த அருளளிக்கும்
வாலாம் பிகையே வான்மணியே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

*93. பொற்றுமரைப் பூங்கமலம் என்றது மதிமண்டலமாகிய சகஸ்ராரத்தை. கதிப்பழமே-முத்தியாகிய அடையத்தக்க கனி போன்றவளே. நுதல் - நெற்றி; என்றது புருவமத்தியை.*

94 தூல சூக்ம காரணமே
தொலையாக் கருணை வாரிதியே
துவாத சாந்த வெளிதனிலே
சுகமா யிருக்கும் நிரந்தரமே
மேலாம் தவத்துக் கதிகாரி
விரிந்த கமல நடுப்பீடம்
வியாபித் தொளியாய் வெளியதன்மேல்
வெளியா யிருந்த மெய்ப்பொருளே
ஆல கால விடம்அருந்தும்
அரனர் இடப்பா கத்தில்வளர்
அமுதே தேக வொளிமயமே
அருணும் புயத்திரி யம்பிகையே
வாலாம் பிகையே உனையடுத்தேன்
வந்தென் றனைநீ காத்தருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

94. வாரிதி - கடல். நிரந்தரம் - இடைவிடாது நிறைந்த பொருள். வியாபித்து - பரவி. தேக ஒளி மயமே - ஒளிமயமான திருமேனி படைத்தவளே.

95 மூன்றே எழுத்தா யிருப்பவளே
முனைமே லெழுத்தே பதினைந்தா
முதலா யிருபத் தெட்டாக
முடிவா யிருந்த மோகனமே
நீண்ட சமயா சாரமுமாய்
நெறியந் தரமாய் முகமாகி
நிகழா தாரக் குண்டலியாய்
நின்றே யிருந்த நேரிழையே
பூண்ட அடியர் அகந்தோறும்
பொன்னம் பலமாய் நடனமிடும்
பொருளே அருளே எனையாளும்
பொன்னே கண்ணி னுண்மணியே
மாண்ட குருவாய் வந்தவளே
மருவுஞ் சுகத்தைத் தந்தவளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

95. மூன்றே எழுத்து - ஸ்ரீம் என்பது. இதில் ஸகார ரகார இகாரங்களைக் காண்க. முனைமேல் எழுத்து - நாதவடிவாகிய பிரணவம். பதினைந்தாம் முதலாய் என்றது கம் முதலாக ஹ்ரீம் என்பது இறுதியாக உள்ள பதினைந்து எழுத்துக்களை; இது காதி வித்தை எனப்படும். இவற்றின் முறையைத் திருமந்திரம் புவனபதி சக்கரத்தானும் குருமுகத்தானும் கேட்டுச் சிந்திக்க. சமயாசாரம் - வாமமார்க்கம். நெறி அந்தரமாய் - உள்ளே நிகழ்கிற ஆறு ஆதார மார்க்கமாய். மாண்ட - மாட்சிமைப்பட்ட.

96 ஆறு சமயங் கடந்துநின்ற
அருண நிதியே சுந்தரியே
ஆசா பாசம் அகன்றவர்பால்
அருளா யிருந்த அருந்ததியே
தேறும் பதினெண் புராணமுமாய்த்
திசைதீ க்ஷையுமாய் நின்றவளே
திக்கே உடையாய்த் தரித்தவளே
செகமே வடிவாய் நின்றவளே
கூறும் ஐம்பத் தொன்றதிலுங்
கோடா கோடி மந்திரமும்
குறிக்கும் அனந்த வேதமுமாய்க்
குறிப்பா யிருந்த பரமாதே
மாறி எனது மலம்அறவே
வந்தே அடிமை கொண்டருள்வாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

96. ஆறு சமயம் - அகமும் புறமும் அகப்புறமும் புறப்புறமுமாக ஆறு ஆறாக விரிந்து நின்ற சமயங்கள். தீக்ஷை - சமயி மேற்கொள்ளும் சடங்கு. ஐப்பத்தொன்று என்றது அகராதி க்ஷகாரம் ஈறாய மாலா மந்திரங்களை.

97 முக்கட் பரமர் இடப்பாக
முதலாய் முளைத்துத் தழைத்தவளே
முன்னம் அவனை ஈன்றவளே
முடிவில் அவனை ஆண்டவளே
செக்கர் இளமா மதிவதனத்
தெளிவிற் றெளிவே தேன்மொழியே
தேவி யாதி பரஞ்சோதி
ஸ்ரீபீ டாதி யருளாதி
பக்கத் துணையே பார்வதியே
பரமேஸ் வரியே காரணியே
பஞ்சா க்ஷரியே உலகேழும்
படைத்த தாயே பைங்கிளியே
மக்கள் தமைப்போல் எனைக்காக்க
வகைநீ அருள்வாய் வளமயிலே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

97. சிவத்தினிடமிருந்து சிருட்டியுன்முகமான போது சத்தி தோன்றுதலின் 'முக்கட் பரமர் இடப்பாகம் முதலாய் முளைத்துத் தழைத்தவளே' எனறார். சத்தியினின்று நாதமாகிய சிவதத்துவம் பிறத்தலின் 'அவனை ஈன்றவளே' என்றார்.

'சிவம்சத்தி தன்னை ஈன்றும் சத்திதான் சிவத்தை ஈன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லாம் ஈன்றும்
பவன்பிரம சாரியாகும் பால்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே'

என்ற சிவஞானசித்தியார் திருவிருத்தம் காண்க.

98 தில்லை யதனுள் நடனமிடுந்
திருவே அருவே திகழ்உருவே
தெளிந்த பரமே சிற்பரமே
செகசூத் திரமே நான்மறையே
அல்லைத் தொலைக்கும் அருமருந்தே
அமுதா னந்தக் கடற்பெருக்கே
அறிவுக் கறிவாய் இருக்கும்உனை
அனைத்துந் துதிக்கும் அருள்பரையே
எல்லை கடந்த பரவெளியே
இசைபுட் களமே அகண்டிதமே
இதத்துக் கிதமா யிருப்பவளே
இரவு பகலாய் ஒளிர்பவளே
வல்ல சோமன் சூடியிடம்
வளரும் வாழ்வே என்கோவே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

98. சிற்பரம் - ஞானமாகிய மேலான பொருள். செக சூத்திரமே - உலகம் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் மூலமான பொருளே. அல்லை - இருள்மயமாகிய ஆணவத்தை; அதாவது அறியாமையை. இசை புட்களமே - இசையின் நிறைவே. சோமன் சூடி - சந்திரனைச் சூடியவர்; சிவபெருமான்.

99 அணியுங் கனக ஒளிமலையே
அமுத நதியே அருட்கடலே
அதிகா ராதி தேவதையே
அகண்ட முடிவில் ஒளிர்சுடரே
பணியும் அணியும் புயத்தாளே
பரநா தாந்த மடத்தாளே
பழகும் அடியார் இதயத்துள்
பரவி யிருக்கும் பனிமொழியே
துணியு மனதா கியயோகி
தொடரும் படியே தொடர்பவளே
தூங்கா துறக்க மானவளே
தொலையாச் சுகமும் ஆனவளே
மணியங் கிரணி விளையாடி
வளருங் கொலுவீற் றிருப்பவளே
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

---

99. அதிகார அதிதேவதையே - இந்திரன் மால் பிரமன் முதலிய பதவிகளில் இருப்பார்க்கு அவரவரிடம் அதிட்டித்து நின்று அவ்வத்தொழில்களை நன்கு இயற்றச்செய்யும் இறைவியே. பணி - பாம்பு. தூங்காது உறக்கமானவள் - யோகநித்திரையில் வெளிப்படுபவள். மணி அம் கிரணி - நீலமணி போலும் ஒளியை உடையவளே. மயிலாபுரியில் வளர் ஈசன் - ஸ்ரீ மாயூரநாதர். அவருக்கு வாழ்வாயிருத்தலாவது அவரது இடப்பாகத்து எழுந்தருளி அகில உலகத்தையும் பாதுகாத்தல்.

100 நான்வே றெனநீ வேருனுய்
நாஞ வேதப் பொருள்ஆனுய்
நாயேன் இனியா ருடன்பேசி
நண்ணுங் குறையைப் போக்குவது
தான்வே தாந்த முடிவானுல்
தனக்கோர் செயலும் உண்டாமோ
சர்வா னந்த சக்கரத்தி
சட்கோ ணத்தி சதுர்க்கரத்தி
தேன்வே றுருசி உண்டாமோ
தீபத் தொளிவே றுண்டாமோ
தேகம் உயிரும் உயிர்க்குயிராய்ச்
சிவமே யொன்ருய் ஆனுயே
வான்வே றுண்டோ திருக்கிருஷ்ணன்
வளருந் துணைவி நீஉரையாய்
மயிலா புரியில் வளரீசன்
வாழ்வே அபயாம் பிகைத்தாயே.

அபயாம்பிகை சதகம் முற்றிற்று

---

100. தியானிப்பவனும் தியானிக்கப்படும் பொருளுமாக உள்ளபொழுது நான்வேறு நீவேறு ஆனுய் என்பதாம். நாஞ வேதம் - பலவகையான வேதம். இந்நூலில் இடையிடையே 'கிருஷ்ணன் துணைவி' என்று சொல்லித் தோத்திரிப்பது ஸ்ரீ அபயாம்பிகை தனக்குத் துணைபுரிந்து அருள்பாலித்த அநுபவ நிலையினை எண்ணி வியந்து கூறியது.